First Edition 5000 Copies
October 1962
TAMIL

# MANITHA DEIVANGAL

Tamil Version of :
WHERE ANGELS SELL EGGS & OTHER STORIES
By
PROFESSOR N. S. PHADKE



Translated into Tamil
By
S. SANKARAN

Price : 1 - 25

PUBLISHED UNDER THE AUSPICES OF
THE SOUTHERN LANGUAGES BOOK TRUST
MADRAS - 34.
SECOND SERIES : TAMIL - 18.

# அணிந்துரை

சி. சுப்பிரமணியம்

மொழி, நாகரிகம், கலை முதலியவற்றில் பெரிதும் ஒற்றுமையுடையவர்கள் தென்பகுதி மக்கள். சரித்திர காலத்திற்கு முன்பிருந்தே இந்த ஒருமைப்பாடு வேரூன்றி இருந்தது. ஆனால் சில நூற்றாண்டுகளுக்கு முன்னால் இவ்வொற்றுமை உணர்ச்சி குறைந்து விட்டது. காலம் செய்த இவ்விடையூற்றை நீக்கி, தென்பகுதி மக்களிடையே ஒரு பகுதியினரின் கருத்துக்கள் மற்ற பகுதியினருக்கும் பரவும் வகையில் தென் மொழிகள் புத்தக டிரஸ்ட் பாடுபட்டு வருவதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி யடைகிறேன்.

1955ல் சென்னையில் நமது நாட்டின் தலைமை அமைச்சர் ஸ்ரீ. ஜவகர்லால் நேரு அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட டிரஸ்ட், நாள்தோறும் நல்ல முறையில் முன்னேறி வருவது மிகவும் பாராட்டு தற்குரியது. இந் நிறுவனம் குழந்தைகள் முதற் கொண்டு பெரியவர்கள் வரை எல்லோருக்கும் பயன்படும் வகையிலே பல புத்தகங்களை வெளி யிட்டிருக்கின்றது. குறிப்பாகத் திருக்குறள் போன்ற நூலைக் கன்னடத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டிருப்பது மிகவும் போற்றுதற்குரியது.

கருத்துப் பரிமாற்றத்தில்தான் மனித இனத்தின் அறிவு வளர்ச்சியும் உலக அமைதியும் அடங்கியிருக்கின்றன. இவ்வுண்மையை அடிப் படையாகக் கொண்டு தென் பகுதியிலே உள்ள

சிறந்த நூல்களைக் குறைந்த விலையிலே மற்ற மொழியாளரும் அறிந்து கொள்ளும் வகையிலே ஆக்கப் பணி புரியும் டிரஸ்டின் சேவை மேலும் மேலும் வளர்ந்து பயன்படும் என நினைக்கிறேன். புத்தகங்கள் வெளியிடுவதோடு மட்டுமல்லாது கருத்து அரங்கிற்கு ஏற்பாடு செய்வதிலும், ஆராய்ச்சி வேலைகளிலும் இப்புத்தக டிரஸ்ட் ஈடு பட்டிருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. குறிப் பாக குழந்தைகளின் புத்தகம் படிக்கும் பழக்கத் தைப் பற்றி அவர்கள் ஆராய்ச்சி நடத்தியிருப்பது நாட்டுக்கு மிகவும் நன்மை பயக்கும் என்றெண் ணுகிறேன். புதிதாக அவர்கள் தமிழில் வெளி யிட விருக்கும் நூல்கள் தமிழ்ப் பெரு மக்களி டையே பெரும் ஆதரவோடு திகழும் என்று எண்ணுகிறேன்.

இத்துறையில் அவர்கள் மேலும் மேலும் சிறந்த நூல்களை எளிய விலையில் வெளியிட்டுத் தென் பகுதி மக்களுக்கும் நாடு முழுமைக்கும் பயன்படும் வகையில் முன்னேற இறைவன் அருள்வாருக.

ஜி. சிவராமன்

# மனித தெய்வங்கள்

"இதோ வந்து விட்டோம்'' என்றார் 'ஜீப்' காரை ஓட்டி வந்த கர்னல் என் பக்கம் திரும்பி. "பராமுலாவில் தானே நீங்கள் இறங்க விரும்புகிறீர்கள் ? இல்லையா ?''

"ஆமாம்'' என்றேன், வெயிலுக்குப் பாதுகாப்பாக கர்னல் அணிந்திருந்த கண்ணாடியில் பிரதிபலித்த என்னுடைய சிறிய உருவத்தைப் பார்த்தவாறே. "இங்கு கொஞ்சம் தங்கி விட்டுப் பின்னர் ஊரி செல்ல உத்தேசம்.''

'ஜீப்' நின்றதும் கீழே இறங்குவதற்குத் தயாரானேன். பின்புறம் அமர்ந்திருந்த, ராணுவ வீரர்களில் ஒருவர் என்னுடைய பெட்டியை வெளியில் எடுத்து வைத்தார்.

"கார் சவாரி உங்களுக்குப் பிடித்திருந்தது என்று நம்புகிறேன்'' என்றார் கர்னல்.

"ஓ! மிகவும் பிடித்திருந்தது...நன்றி'' என்றவாறே இளநகை செய்தேன். "ஐந்தரை மணிக்கு ஸ்ரீநகரை விட்டுப் புறப்பட்டோம். இப்போது ஆறேகால் மணி தான்

ஆகிறது. முக்கால் மணி நேரத்தில் நாற்பத்திரண்டு மைல் வந்திருக்கிறோம்...பிரமாதமான வெற்றிதான்..."

"சாலை அருமையாக இருந்ததால் தான் வர முடிந்தது. ஒரு சிகரட் எடுத்துக் கொள்ளுங்கள்" கர்னல் புன்னகை புரிந்தவாறே தங்க முலாம் பூசிய தமது சிகரட் பெட்டியை எடுத்து என் முகத்துக் கெதிராக நீட்டினார்.

நான் சிகரெட்டை எடுத்துப் பற்ற வைக்கப் போகும் சமயத்தில் இளங்குரல் ஒன்று கேட்டது. "எஜமான்! வேக வைத்த முட்டை வேண்டுமா?"

நான் திரும்பிப் பார்த்தேன். சாலையில் ஜீப் அருகில் ஒரு சிறுவன் நின்று கொண்டிருந்தான். வேக வைத்த முட்டைகள் கொண்ட சிறு பை ஒன்று அவன் கையிலிருந்தது. நீல விழிகள் கொண்ட அவன் என்னை நோக்கிப் புன்னகை செய்தான்.

"ஓகோ! நீ வந்து விட்டாயா?" என்று அச் சிறுவனைப் பார்த்துச் சிரித்த கர்னல் என் பக்கம் திரும்பிச் சொன்னார். "இந்த சிறுவன் யாரென்று தெரியுமா? பராமுலாவில் தங்க உத்தேசித்திருப்பதால் இவனைத் தெரிந்து கொள்வது நல்லது. அவன் இந்த ஊர்க்காரன் என்று நினைக்கிறேன். ஏனென்றால் ஒவ்வொரு முறை இந்தப் பக்கம் போகும் போதும் இவனும் இவனுடைய சகோதரனும் முட்டைகள் விற்றுக் கொண்டிருப்பதைப் பார்க்கிறேன்."

நான் ஏதோ முணுமுணுத்தவாறே சிறுவனைப் பார்த்தேன். அவன் மிகவும் ஒல்லியாக இருந்தான். அவனுடைய வயதுக்கு சற்று அதிக உயரம்தான். சுமார் பதினான்கு வயது இருக்க வேண்டும். சுருண்டு கிடந்த சிவந்த கேசம். எதையோ கேட்கத் துடிப்பதுபோல் விழிகள் 'துறு துறு' வென்று காணப்பட்டன. அவனுடைய கவர்ச்சியான

தோற்றத்துக்குக் காரணம் என்னவென்பதை ஆராய முயன்று அவனையே பார்த்துக் கொண்டிருந்தேன். கவர்ச்சி எங்கே இருந்தது? அவனுடைய விழிகளிலா? அல்லது அவன் நம்பிக்கையுடன் நின்றுகொண்டிருந்த நளினத்திலா?

"இன்று உன் சகோதரனைக் காணவில்லையே!" என்று கேட்டார் கர்னல்.

"வீட்டிலே வேலையாக இருக்கிறான் எஜமான்... கொட்டகை போட்டுக் கொண்டிருக்கிறான். அதில் தான் கடை வைக்கப் போகிறோம்."

"கடையா? ஓகோ! நிலையான வியாபாரம் செய்யப் போகிறாயா?...போகட்டும். இன்று எவ்வளவு முட்டை விற்றாய்?"

"இன்று எனக்கு நேரம் சரியில்லை" என்ற சிறுவனுடைய இளம் நீல விழிகளில் கவலை பிரதிபலித்தது. "ராணுவ வண்டிகள் வந்தால் நிறைய விற்கும். ராணுவ வீரர்கள் எங்களிடம் மிகவும் பிரியம் கொண்டவர்கள். எங்களுடைய முட்டை அவர்களுக்கு ரொம்பப் பிடிக்கும். இன்று வண்டிகளே வரவில்லை. இதோ பாருங்கள் பை நிறைய அப்படியே இருக்கிறது" என்ற அவன் தனது அழகிய மெலிந்த கையை நீட்டி பையைக் கர்னலிடம் காட்டினான்.

கர்னல் பையை வாங்கிக் கொண்டார். "இது முழுவதையும் நான் எடுத்துக் கொள்கிறேன். இந்தா..." என்ற அவர் ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவனிடம் நீட்டினார்.

சிறுவன் தலையையாட்டினான். "எஜமான்! அவ்வளவு பணத்தை என்னால் வாங்கிக் கொள்ள முடியாது. பையில் இருபத்திரண்டு முட்டைகள் தான் உள்ளன" என்ற அவனுடைய முகத்தில் சற்று கண்டிப்பு காணப்பட்டது.

" சரி. 22 முட்டை என்ன விலை ?"

" ஒரு முட்டை மூன்றணு எனவே நான் 66 அணுக்கள் தான் பெற்றுக் கொள்ள முடியும். அதற்கு மேல் ஒரு பைசா கூட வாங்கிக் கொள்ள மாட்டேன். நாங்கள் பிச்சைக்காரர்கள் அல்ல." வார்த்தையிலே தன் கௌரவத்தைப் புலப்படுத்த விரும்பியவனைப் போல் அவன் காணப்பட்டான்.

" அப்படியானல் சரி. இந்த நோட்டை என் கணக்கில் வரவு வைத்துக்கொள். மீதித் தொகைக்கு அடுத்த தடவை வரும்போது முட்டை வாங்கிக் கொள்கிறேன்." என்று சிரித்தவாறே கூறிய கர்னல் சிறுவனுடைய கையில் நோட்டைத் திணித்தார்.

" எஜமான் ! இதோ உப்பும் மிளகுத் தூளும்" என்று கூறிய சிறுவன் கை நிறைய சிறு பொட்டலங்களை எடுத்து நீட்டினன்.

" இந்தப் பொட்டலங்களுக்கு எவ்வளவு தர வேண்டும் ?" என்று என்னைப் பார்த்து கண்களைச் சிமிட்டியவாறே கர்னல் கேட்டார்.

" ஒன்றும் தர வேண்டாம். முட்டை வாங்கினல் இவை இனும்...எஜமானுக்குத் தான் தெரியுமே."

" ஆமாம். நீ சொன்னதாக நினைவிருக்கிறது" என்ற கர்னல் பொட்டலங்களைப் பெற்றுக் கொண்டு என் பக்கம் திரும்பினர். " ஒவ்வொரு பொட்டலத்திலும் உப்புப் பொடியும் மிளகுத் தூளும் உள்ளன. இதைத் தொட்டுக் கொண்டு சாப்பிட்டால் முட்டை அதிக சுவையாக இருக்குமாம். பையன் விற்பனை செய்வதில் கெட்டிக்காரன் தான் இல்லையா ?"

" அப்படித்தான் தோன்றுகிறது" என்றேன். கர்னல் பின்புறம் ஆசனத்தில் இருந்தவர்களிடம் சில முட்டை

களைக் கொடுத்து விட்டு என்னையும் கொஞ்சம் எடுத்துக் கொள்ளச் சொன்னார். இரண்டு எடுத்துக்கொண்டு கீழே இறங்கினேன்.

"நல்லது. வணக்கம்" என்ற கர்னல் என்னை நோக்கிக் கையை ஆட்டிவிட்டு 'ஜீப்' பைக் கிளப்பினார். மறு கணம் சாலையில் சிறுவனுடன் நான் தனியே விடப் பட்டேன்.

என்னுடைய கைப் பெட்டியைக் குனிந்து எடுக்கப் போன சமயம் சிறுவன் முன்னால் வந்து அதனைத் தூக்கிக் கொண்டான். "எஜமான்! உங்களுக்கு ஆட்சேபணை யில்லா விட்டால் நான் தூக்கிக் கொண்டு வருகிறேன். எங்கே தங்கப் போகிறீர்கள்?"

"பிரயாணிகள் விடுதியில்...நான் வருவது பற்றி அவர் களுக்குத் தகவல் கொடுத்திருந்தேன். நான்கு மணிக்கு இந்த இடத்துக்கு ஓர் ஆளை அனுப்பும்படி சொல்லியிருந் தேன். ஆனால் ஸ்ரீநகரை விட்டுப் புறப்படத் தாமதமாகி விட்டது."

தூரத்தே தெரிந்த வானத்தைப் பார்த்தேன். அஸ்த மன சூரியன் மஞ்சள் நிறத்தில் பளபளத்தது. அதன் செம்பொன் நிறக் கிரணங்கள் மேகக் குவியலில் இறைந்து கிடந்தன. பனி படிந்த மலைச் சிகரங்கள் பின்னணியில் திரைபோல் அமைந்திருந்தன. எத்தகைய அற்புதமான இடம் என்று வியந்தேன். வலது புறம் சாலையை ஒட்டி னாற் போல் காணப்பட்ட மண்டபங்களையும் வீடுகளையும் பார்த்த போது ஆறு மாதங்களுக்கு முன்பு படையெடுத்து வந்தவர்களின் அழிவுச் செயல்களால் பராமுலா பட்ட பாட்டைப் பற்றி நான் கேள்விப்பட்டதை யெல்லாம் நினைவு படுத்திக் கொண்டேன். என்னையும் மீறிப் பெரு மூச்சு வெளிப் பட்டது.

"அதுதானே பராமுலா?" என்று சுட்டிக் காட்டிக் கேட்டேன்.

"ஆமாம், எஜமான்," என்றான் என் முன்னால் நடந்து சென்று கொண்டிருந்த சிறுவன். "எஜமான் பராமுலாவைப் பார்க்க வந்திருக்கிறீர்களா?"

அவனுடைய அழகிய கழுத்தையும் அழுக்கடைந்த சட்டையின் கீழமைந்த பரந்த தோள்களையும், புழுதி படிந்த சிவந்த பாதங்களையும் பார்த்தவாறே "ஆம்" என்றேன்.

"எஜமான் வெகு தூரத்திலிருந்து வருகிறீர்களோ?"

"ஆமாம்...ஆமாம்" என்றேன் முட்டையைத் தின்று கொண்டே. "முட்டை ருசியாக இருக்கிறது."

"அவை புத்தம் புதியவை எஜமான். ஒவ்வொரு நாள் காலையிலும் என்னுடைய அம்மா தானே கோழிப் பண்ணைக்காரரிடம் போய் வாங்கி வருவாள்."

"ஓ. உனக்கு அம்மா இருக்கிறாளா? ரொம்ப வயதானவளா?"

"இல்லை. மிகவும் சாமர்த்தியசாலி. கண் குருடு என்ற போதிலும் புதிய முட்டையைக் கண்டு பிடித்து விடுவார்கள்."

"அப்படியா?" என்ற நான் அவனுக்குத் துயரம் தரக் கூடிய விஷயம் பற்றிக் கேட்க விரும்பாதவனாக "உன் பெயரை நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று கேட்டேன்.

"என்னை ஷபனு என்று கூப்பிடுவார்கள்" என்ற அவன் பிரயாணிகள் விடுதியின் வாயிலில் நின்று கொண்டிருந்த வேலைக்காரனைப் பார்த்து "ஏ! அஹாடு எஜமான் வந்து விட்டார்" என்று கத்தினான்.

அந்த ஆள் துள்ளிக் குதித்து என்னை நோக்கி ஓடி வந்தான்.

"எஜமான் மன்னிக்க வேண்டும்" என்று கெஞ்சும் குரலில் வேண்டிய அவன் ஷபனுவிடமிருந்து கைப்பெட்டியை வாங்கிக் கொண்டான். "ஒரு மணி நேரம் காத்திருந்து பார்த்தேன். காணுததால் எஜமான் இன்று வரவில்லை என்று நினைத்து விட்டேன். மன்னிக்க வேண்டும்" என்ருன்.

அவன் ஓயாமல் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேயிருப்பதற்கு முடிவு கட்ட விரும்பியவனுக "அதனுல் பரவாயில்லை" என்றேன்.

விடுதியின் வாயிலை நெருங்கியதும் ஷபனு வணக்கம் செய்தான். "இப்போது நான் போகலாமா எஜமான்?" என்று கேட்டான்.

"உம் போகலாம். உனக்கு மிகவும் நன்றி" என்றேன்.

அவன் மற்ெருருமுறை வணக்கம் சொல்லிவிட்டுத் திரும்பிச் சென்ருன். சில அடி தூரம் சென்றதும் ஓடத் தொடங்கினுன். அவன் ஓடிய விதம் எனக்குப் பிடித்திருந்தது. மான்குட்டியொன்று துள்ளி ஓடுவதை அது எனக்கு நினைவூட்டியது.

மறுநாள் காலையில் சீக்கிரமே எழுந்துவிட்டேன். தலைநகரான ஸ்ரீநகரைக் கைப்பற்றும் எண்ணத்துடன் வடமேற்கு எல்லையிலிருந்து ஆறு மாதங்களுக்கு முன்பு படையெடுத்து வந்தவர்கள் வனப்பு மிக்க பராமுலாவைப் பாழ்படுத்திச் சென்ருர்கள். அவர்கள் புரிந்த கொடுமையின் சின்னங்களை நேரில் காண்பதற்காக நகருக்குள் சென்று சுற்றிப்பார்க்க விரும்பினேன். காலையுணவை முடித்துவிட்டு சிகரட் பிடித்தவாறு வராந்தாவில் நின்றுகொண்டு, கூட வருமாறு அஹாடுவைக் கேட்கலாமா என்று யோசித்தேன்.

அப்போது இரண்டு சிறுவர்கள் விடுதியை நோக்கி வேகமாக வருவதைக் கண்டேன். ஷபனுவை சுலபமாக அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது. அவர்கள் அருகில் வந்து எனக்கு வணக்கம் தெரிவித்தார்கள்.

"ஷபனுவா? வா! வா!" என்றேன்.

"எஜமான்! இது என்னுடைய சகோதரன்" என்று உடன் வந்தவனை எனக்கு அறிமுகம் செய்துவைத்தான்.

"என்ன? மீண்டும் முட்டை கொண்டுவந்திருக்கிருயா?" என்றேன் அவனைக் கேலி செய்ய விரும்பியவனுக.

என்னுடைய கேலியைப் புரிந்துகொண்டவனுக அவன் சிரித்தான். "இந்தப் பக்கமாகப் போகும் பிரயாணிகளுக்கு மட்டுமே நாங்கள் முட்டை விற்போம்."

"அப்படியானுல் இப்போது எதை விற்பனை செய்யப் போகிருய்?"

"ஒன்றுமில்லை எஜமான். உங்கள் பூட்சுகளைப் பாலிஷ் செய்துகொள்ள நீங்கள் விரும்பக் கூடுமென்று எண்ணினேம். மேலும் சகோதரன் உங்களைப் பார்க்க விரும்பினுன்."

"ஓகோ அப்படியா? என்னைப் பார்க்கவேண்டுமென்று ஒருவர் வருவது என் வாழ்நாளில் இதுதான் முதல்தடவை" என்று கூறிச் சிரித்தேன். பின்னர் அஹாடுவைக் கூப்பிட்டு என்னுடைய பூட்சுகளை எல்லாம் எடுத்து வருமாறு கூறினேன். சிறுவர்கள் இருவரும் தங்கள் வேலையைத் தொடங்கினுர்கள்.

"ஷபனு! உன் சகோதரனுடைய பெயரை நான் தெரிந்து கொள்ளலாமா?" ஏதாவது பேசவேண்டுமென்பதற்காகக் கேட்டேன்.

"நான் அண்ணு என்றுதான் கூப்பிடுவேன்" என்ருன் ஷபனு என்னைப் பார்க்காமலே.

"நீங்கள் செருப்புத் தைக்கும் தொழில் செய்பவர்கள் இல்லை என்று நினைக்கிறேன்."

"இல்லை எஜமான். இல்லவேயில்லை" என்ற அவனுடைய மறுப்பிலே அழுத்தம் இருந்தது. "நான் ஒரு பழத் தோட்டக்காரருடைய மகன். பணம் கிடைக்கிறது என்பதற்காகத்தான் பூட்சுக்குப் பாலிஷ் போடுகிறோம். நாணயமான உழைப்பானால் எல்லாமே நல்லதுதான் என்று அம்மா சொல்வார்கள்."

நாணயமான உழைப்பின் தத்துவத்தைப் புரிந்து கொண்டிருந்த அந்த இரு சிறுவர்களையும் கவனித்தவாறே "ஓ...அப்படியா ?" என்றேன்.

வேலையை முடித்துவிட்டுப் பளபளவென்றிருந்த பூட்சுகளை அவர்கள் வராந்தாவில் வைத்ததும் நான் ஒரு ரூபாய் நோட்டை எடுத்து ஷபனுவிடம் நீட்டினேன்.

"எஜமானிடம் சில்லறை இல்லையா ?"

"சில்லறை எதற்கு? இதை வாங்கிக்கொள்."

"அதெப்படி முடியும்? உழைத்துப் பாடுபடாதவற்றிற்காக நாங்கள் பணம் பெற்றுக்கொள்ள மாட்டோம். எங்களுக்குப் பணம் தேவைதான். ஆயினும் இனமாக நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம். பணத்தை உழைத்து சம்பாதிக்கவே விரும்புகிறோம்."

இருவரும் அருகருகே சூரிய ஒளியில் நின்றுகொண்டிருந்தனர். ஒருவன் சிவந்த கேசமும் நீலநிற விழிகளும் கொண்டவன். மற்றவன் செம்பட்டை படர்ந்த கேசமும் கருவிழிகளும் அமைந்தவன். அவர்களுடைய இளம் முகத்தில் விசித்திரமான ஒரு உறுதி காணப்பட்டது.

"சரி. இதனை சம்பாதித்து அடைவதற்கு வாய்ப்புக் கொடுத்தால் நோட்டைப் பெற்றுக்கொள்வாயா ?"

"ஓ! என்ன வேலே வேண்டுமானுலும் கொடுங்கள். சந்தோஷமாகச் செய்து முடிப்போம்."

"அப்படியானுல் நகரத்துக்கு என்னுடன் வந்து வழி காட்டுங்கள். என்னோடு வருவதற்கு இஷ்டம்தானே?"

"நிச்சயமாக இதைவிட விருப்பமான காரியம் எதுவும் எங்களுக்குக் கிடையாது."

நான் உள்ளேபோய் என் உடைகளேயணிந்து கொண்டு வெளியே வந்தேன்.

அவர்கள் அவ்வளவு சிறந்த வழிகாட்டிகளாக இருப் பார்கள் என்று நான் நினேக்கவில்லே. நகரின் ஒவ்வொரு மூலேமுடுக்கும், படையெடுப்பாளர்களின் தாக்குதலுக்கு உள்ளாகி அழிந்துபோன ஒவ்வொரு இடத்தின் வரலாறும் அவர்களுக்குத் தெரியும் போலிருந்தது.

இதோ பாதி எரிந்து பாழடைந்திருக்கும் மசூதி. சூறை யாடி இடித்துத் தகர்த்தெறியப்பட்ட இந்துகோயிலொன்று இருந்த இடம் இது. அதோ அது மிகவும் பணக்காரராக இருந்த ஒரு முஸ்லிம் வீடு இருந்த இடம். அவரை வதைத்துக் கொன்றுவிட்டனர். அவருடைய மனேவிமாரும் பெண்களும் தங்கள் மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள ஜீலம் நதியில் மூழ்கித் தற்கொலே செய்துகொண்டனர். படையெடுத்து வந்தவர்களே எதிர்த்துப் போராட மக்களேத் திரட்ட முயன்ற மக்பூல் ஷெர்வானியைச் சிலுவையில் அறைந்து கொன்ற பொதுச் சதுக்கம் இது. கடைவீதி, பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி ஆகியவற்றைப் படையெடுத்து வந்தவர்கள் முற்றிலும் அழித்துவிட்டனர். பெண்கள் வீதி களில் இழுத்தெறியப்பட்டனர். தானியக் கிடங்குகளுக்கும் வைக்கோற் போர்களுக்கும் தீ வைக்கப்பட்டது. ஆடு மாடுகளும், வண்டிக் குதிரைகளும் தீயில் சிக்கி மாண்டன. இதையெல்லாம் சுட்டிக்காட்டிச் சொல்லிக்கொண்டு வந்த

ஷபனுவும் அவனுடைய அண்ணனும் சில நல்ல விஷயங்களை யும் கூறினர்.

படையெடுத்து வந்தவர்கள் ஸ்ரீநகர் வரை வந்துவிட்டதையும், இந்திய ராணுவத்தினர் தக்க சமயத்தில் வந்து கடுமையாகப் போரிட்டு ஊரி மலைத்தொடருக்கப்பால் அவர்களை விரட்டி அடித்ததையும் காஷ்மீர் பாதுகாக்கப் பட்டதையும் அவர்கள் விவரித்துக் கூறினர்.

பின்னர் பராமுலாவில் வாழ்ந்த மக்கள் பாழடைந்த தங்கள்வீடுகளையும்கடைகளையும்கோயில்களையும் மசூதிகளை யும் செப்பனிட்டு ஒழுங்கு படுத்தத் தொடங்கினர். இப் பணியில் ஒவ்வொருவரும் தோழமையுணர்ச்சியுடன் ஒரு வர்க்கொருவர் உதவி செய்துகொண்டனர். படையெடுத்து வந்தவர்கள் மக்களுடைய செல்வத்தைச் சூறையாடினர். ஆனால் ஒற்றுமையுணர்வு என்ற புதிய செல்வத்தைக் கொடுத்துச் சென்றனர். மக்களுடைய வீடுகள் தீக்கிரை யாக்கப்பட்டன. ஆனால் தீ வைத்துக் கொளுத்தியவர்கள் மக்களுடைய உள்ளத்தில் தன்னம்பிக்கை என்னும் ஒளி யைச் சுடர்விடச் செய்து விட்டனர்.

" இன்னும் ஒரு வருடம் கழித்து வந்து பார்க்கவேண் டும் எஜமான். இந்த ஊர் படையெடுப்புக்கு உள்ளா யிற்று என்பதை நீங்கள் நம்பவே மாட்டீர்கள். மீண்டும், அழகானதாகவும் நல்ல முறையிலும் அமைத்து விடலாம் என்று நாங்கள் நம்பிக்கொண்டிருக்கிறோம் " என்று அடிக் கொரு தடவை கூறினன்.

காஷ்மீரத்தைப் பற்றி ஒரு புத்தகத்தைப் படித்துத் தெரிந்து கொள்ளக் கூடியதைவிட அதிகமாக இந்த இரு சிறுவர்களிடமிருந்தும் தெரிந்து கொண்டேன். ஷபனுவுக்கு மேற்கொண்டு ஒரு ரூபாய் கொடுத்திருப்பேன். ஆனால் அப்படிச் செய்வது அவனுடைய கௌரவத்தைக் குலைப்ப

தாக இருக்கும் என்பது எனக்குத் தெரியுமாதலால் அதனைச் செய்ய விரும்பவில்லை. எனவே விடுதிக்குத் திரும்பியதும் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவிப்பதுடன் திருப்தியடைந்தேன்.

"வழிகாட்டிகள் எப்படி? எஜமானுக்குத் திருப்தி தானே?" என்று உணவு பரிமாறிக்கொண்டே அஹாடு கேட்டான்.

"இத்தகைய அருமையான சகோதரர்களை நான் கண்டதேயில்லை. அவர்கள் என்ன இரட்டைப் பிறவிகளா?... அப்படித்தான் இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்."

"இல்லை எஜமான். இவர்கள் இரட்டைப் பிறவிகள் அல்ல...கூடப்பிறந்த சகோதரர்கள் கூட அல்ல. எல்லோரிடமும் அப்படிச் சொல்லிக்கொண்ட போதிலும் இருவரும் உடன் பிறந்தவர்களல்ல!"

இவ்வாறு அவன் கூறியது எனக்கு வியப்பாக இருந்தது. அவன் கூறியதை நம்பாதவன் போல் தலையை யாட்டினேன்.

"நான் சொல்வது உண்மை. என்னை நம்புங்கள். குழந்தைகளாக இருந்ததிலிருந்தே இருவரையும் எனக்குத் தெரியும். ஷபனு அண்ணு என்றழைக்கும் பையன் ஓர் இந்து, அவனுடைய பெயர் காசிநாத். அவனுடைய தந்தை காட்டிலாகா அதிகாரியாக இருந்தவர். படையெடுத்து வந்தவர்களால் அவர் கொல்லப்பட்டார். அவருடைய வீடு தீக்கிரையாயிற்று. காசிநாத் அனுதையாக விடப்பட்டதும் ஷபனுவினுடையதாய் அவனைத் தன் குடும்பத்தில் ஒருவனுக்கிக் கொண்டாள். பட்டினிக் கொடுமையின் பயங்கரத்தை அறிந்தவள் அவள். அவளுடைய வீட்டையும் கடையையும் கூடப் படையெடுப்பாளர்கள் எரித்து விட்டனர். ஆனால் அவள் தைரியம் மிக்கவள். தனது

மூத்த மகனைப் பாதுகாப்புப் படையில் சேர அனுப்பினுள். இப்போது அவன் ஊரியில் இருக்கிருன். இந்த இரு சிறுவர்களும் வேலை செய்து சம்பாதித்து வீட்டில் அடுப்பு அணையாமல் பார்த்துக் கொண்டு வருகிருர்கள். கொஞ்சம் பணம் சேர்த்துக் கொட்டகை யொன்றையும் கட்டிக் கொண்டிருக்கிருர்கள். அங்கே ஒரு கடை வைக்கப் போகிருர்களாம்.''

'' அத்துடனுவது அவர்கள் கஷ்டம் விடியட்டும். அது சரி...ஷபனு தனக்கேற்பட்ட கஷ்ட நஷ்டங்களைப் பற்றி எதுவுமே சொல்லவில்லையே ஏன்?''

'' அவன் மிகவும் மானஸ்தன். கௌரவத்தை விட்டுக் கொடுக்காதவன், தன் கஷ்டங்களைப் பிறரிடம் கூறவே மாட்டான்.''

'' காசிநாத்துடைய தங்கையைப் பற்றிக்கூட என்னிடம் சொல்லவில்லையே!''

'' உண்மையிலேயே காசிநாத் அவனுடைய சகோதரன் என்று மற்றவர்கள் நம்பவேண்டும் என்பதற்காகத்தான். அவனுடைய தாயார் எல்லோரிடமும் என்ன சொல்வாள் தெரியுமா? எனக்கு மூன்று பிள்ளைகள். இரண்டுபேர் அல்ல என்று தான்.''

இதன் பின்னர் அஹூடு வேறு பல விஷயங்களைப் பற்றிப் பேசினுன். ஆயினும் ஷபனுவைப் பற்றியும் கண்ணற்ற அவனுடைய தாயைப் பற்றியும்தான் என் மனம் எண்ணிக் கொண்டிருந்தது. உணவை முடித்துக் கொண்டு படுக்கையில் சாய்ந்ததும் 'இன்னும் சில மணி நேரத்தில் பராமுலாவை விட்டுப்போய் விடுவோமே! மீண்டும் அந்த சிறுவர்களைப் பார்க்க முடியாதே!' என்ற வருத்தம் மேலிட்டது.

நான் ஊரி செல்வதற்கு ராணுவக்கார் வந்து விட்டதா என்பதைப் பார்த்துவர அஹ்மது போயிருந்தான். அவனை எதிர்பார்த்து விடுதியின் வராந்தாவில் நின்று கொண்டிருந்த போது இரு சிறுவர்களும் வந்ததைக் கண்டு சிறிது வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன்.

“ஷபனு! இப்போது ஊரிக்குப்போகப் போகிறேன்” என்றேன்.

“அது தெரியும் எஜமான். காலையில் தான் சொன்னீர்களே! அதற்காகத்தான் வந்தோம்.”

“வழியனுப்ப வந்தீர்களா?”

“ஆமாம்” என்ற ஷபனு சற்றுத் தயங்கியவாறே தொடர்ந்தான். “எங்களுக்காக—எங்கள் அம்மாவுக்காக சிறிது சிரமத்தை ஏற்றுக்கொள்வதை எஜமான் பொருட்படுத்த மாட்டீர்களே!”

“மகிழ்ச்சியுடன் செய்வேன். உங்கள் தாயாருக்கு நான் என்ன செய்ய வேண்டும்?”

“ஊரியிலிருக்கும் எங்கள் அண்ணன் உஸ்மானுக்காக கொஞ்சம் பலகாரங்கள் தயார் செய்திருக்கிறாள்” என்று கூறிய அவன் தன் கையில் பிடித்திருந்த சிறு தகரப் பெட்டியைத் தூக்கிக் காட்டினான். “எஜமான் தயவுசெய்து இதனை எங்கள் அருமை சகோதரனிடம் சேர்ப்பித்துவிட முடியுமா? அங்கே அவன் பாதுகாப்புப் படையில் இருக்கிறான்.”

நான் அவனிடமிருந்து பெட்டியை வாங்கிக்கொண்டேன். “உன் அண்ணனிடம் ஏதாவது சொல்ல வேண்டுமா?” என்று கேட்டேன்.

“விசேஷமாக ஒன்றும் இல்லை. சைக்கிள் கிடைத்தால் அடுத்த வாரம் நானே அங்கு போய்ப் பார்த்துவிட்டு வர

லாம் என்றிருக்கிறேன். நாங்கள் சௌக்கியமாக இருக்கிரும். கொட்டகை தயாராகி விட்டது. சாமான்கள் வாங்குவதற்குப் போதிய பணம் கிடைத்ததும் கடையைத் தொடங்கி விடுவோம் என்று சொன்னால் போதும்'' என்ற அவன் அவசரமாக மேலும் தொடர்ந்து தன் தவறைத் திருத்தினன்.

"நான் கடைசியாகச் சொன்ன விஷயத்தை உஸ்மானிடம் சொல்ல வேண்டாம் எஜமான். எங்களுக்குப் பணத் தேவை இருக்கிறது என்பது அவனுக்குத் தெரிய வேண்டாம். எங்களுக்காக அவன் கவலைப்படக் கூடாது. அதனை நாங்களே சமாளித்துக் கொள்கிரும். கொஞ்சநாள் ஆகும்; அதனல் பரவாயில்லை. நாங்கள் சௌக்கியமாக இருக்கிரும். கொட்டகை தயாராகி விட்டது என்பதை மட்டும் சொன்னல் போதும்.''

"கடை போடுவதற்கு எவ்வளவு பணம் தேவைப் படும் ?''

"முப்பது ரூபாயாவது வேண்டும். அவ்வளவு தொகை மிச்சம் பிடித்து சேர்க்கக் கொஞ்ச நாள் ஆகும். ஆயினும் அதைச் செய்தே தீருவோம்.''

"நீ நிச்சயமாகச் செய்வாய் என்று எனக்குத் தெரியும்'' என்று கூறி இருவரையும் முதுகில் அன்புடன் தட்டிக் கொடுத்தேன்.

அஹாடு விடுதியை நோக்கி ஓடி வந்துகொண்டிருந்தான். "கார் வந்துவிட்டது என்று நினைக்கிறேன். நான் இப்போது கிளம்ப வேண்டும். வரட்டுமா ?''

இருவரும் புன்னகை செய்தவாறே எனக்கு வணக்கம் தெரிவித்தனர். பின்னர் என்னுடைய பெட்டியை எடுத்துக் கொண்டு எனக்கு முன்னல் நடந்தனர். காரில் ஏறிக் கொண்டு விடைபெற்றுக் கொள்வதற்காக நான் கையை

ஆட்டியதும் ஷபனு அருகில் வந்து மெல்லிய குரலில், "பணத்தைப்பற்றி உஸ்மானிடம் சொல்ல வேண்டாம்" என்றான்.

மறுகணம் கார் கிளம்பியது.

நான் ஊரியில் தங்கிய இரண்டாவது நாள் விசேஷப் பாதுகாப்பு அதிகாரியைச் சந்தித்தேன். "பாதுகாப்புப் படையில் இருக்கும் உஸ்மான் என்ற இளைஞனை நான் பார்க்க வேண்டும்" என்றேன்.

அதிகாரியின் முகம் கறுத்தது. அவர் எதுவும் பேச வில்லை. இதனால் சிறிது குழப்பமடைந்த நான் உஸ்மான் என்ற பையனைப் பார்க்க முடியுமா?" என்று மீண்டும் கேட்டேன்.

அவர் தமது தலையையாட்டியவாறே உதட்டைக் கடித் துக் கொண்டார். "நான் மிகவும் வருந்துகிறேன். அவனை நீங்கள் பார்க்க முடியாது" என்றார்.

"ஏன்? அது ராணுவ விதிகளுக்கு விரோதமானதா? அல்லது..."

"இல்லை, விதிகளுக்கு விரோதம் இல்லை...பாதுகாப்புப் படையினர் எல்லோரையும் இப்போது நீங்கள் பார்க்கப் போகிறீர்கள். அவர்கள் எத்தகைய வீரர்கள், எவ்வளவு தூரம் இந்தியப் படையினருக்கு உதவி செய்கிறார்கள் என்பதை யெல்லாம் நீங்களே பார்த்துத் தெரிந்து கொள் ளப் போகிறீர்கள்."

"அப்படியானால் நான் உஸ்மானை ஏன் பார்க்க முடி யாது என்று சொல்கிறீர்கள்?"

"ஏனென்றால்..." அவருடைய உதடுகள் துடித்தன. வார்த்தைகள் தடுமாறிக் கொண்டு வந்தன. "ஏனென் றால்...அவன் இப்போது இல்லை, நேற்றுமாலை இறந்து விட்டதாகத் தகவல் வந்துள்ளது."

"இறந்து விட்டானு? நீங்கள் என்ன சொல்கிறீர் கள்?" என்று கேட்டேன் அவர் கூறியதை நம்பாதவனுக.

"அதிர்ச்சி தரும் விஷயம் தான். ஆயினும் அது உண்மை" என்ருர் அதிகாரி. பின்னர் உஸ்மான் இறந்த விதத்தை விவரித்துக் கூறினுர். மலைத்தொடரில் மிகவும் கஷ்டமான ஓரிடத்தில் காவல் காத்துக்கொண்டிருந்த வீரர்களுக்கு உஸ்மான் உணவுப் பொருள்களை எடுத்துச் சென்று கொண்டிருந்தபோது திடீரென்று மறைவிடத்தி லிருந்து துப்பாக்கிக் குண்டு ஒன்று பாய்ந்து வந்து அவனு டைய இதயத்தைத் துளைத்து விட்டது.

கேட்பதற்கே சங்கடமாக இருந்தது. வாயடைத்துப் போய் வேதனையால் துடித்த என் தலையைக் கைகளால் அழுத்திக் கொண்டேன்.

"அருமையான பையன்...இந்த உஸ்மான். உங்களுக்கு அவனைத் தெரியுமா?" என்று அதிகாரி கேட்டார்.

அதற்கு நான் பதில் சொன்னேனு இல்லையா என்பது எனக்கு நினைவில்லை.

மாலையில் ஊரியை விட்டுப் புறப்பட்டேன். ஜீப் பரா முலாவில் நிற்கும்போது ஷபனுவும் அவனுடைய அண்ண னும் வருவார்களே என்ற நினைவினுல் என் உள்ளம் நடுங் கியது. என்னைக் கண்டதும் ஓடிவந்து உஸ்மானைப் பற்றிக் கேட்பார்களே! அவர்களுக்கு என்ன பதில் சொல்வேன்?

"பராமுலாவில் நிற்காமல் போனுல் என்ன?" என்று கர்னலிடம் கேட்டேன்.

அந்தப் பக்கமாகச் செல்லும் எல்லாக் கார்களும் சோதிக்கப்படுவதாகவும், அங்கு தாமதிக்கும் நேரத்தை முடிந்த அளவு குறைப்பதுதான் தாங்கள் செய்யக் கூடியது என்றும் அவர் தெரிவித்தார்.

பராமுலாவை யடையும்போது அந்த சிறுவர்கள் வர முடியாமல் ஏதாவது நடக்கக் கூடாதா என்று கடவுளை வேண்டிக் கொண்டேன்.

அது நிறைவேறவில்லை. கடவுள் அவ்வளவு தூரம் கருணை காட்டவில்லை. மாலையின் மங்கிய ஒளியில் சாலையில் இரு சிறுவர்களும் நின்று கொண்டு இருப்பதைச் சற்றுத் தூரத்தில் வரும்போதே என்னால் காண முடிந்தது.

ஜீப் நின்றதும் அவர்கள் துள்ளி ஓடிவந்தனர். என்னைக் கண்டதும் உற்சாகத்துடன் கத்தினர்.

"இங்கே மீண்டும் ஒரு நாள் தங்கப் போகிறீர்களா?" என்று ஷபனு கேட்டான்.

"எனக்கு இஷ்டம் தான். ஆனாலும் தங்குவதற்கில்லை, இன்றிரவே நான் ஸ்ரீநகருக்குப் போயாக வேண்டும்."

"உஸ்மானிடம் பெட்டியைக் கொடுத்து விட்டீர்களா?"

நான் பேசாமல் தலையை யாட்டினேன்.

"அம்மா சௌக்யமாக இருப்பதாக அவனிடம் தெரிவித்தீர்களா?"

மீண்டும் தலையையாட்டினேன். முகத்தில் சிரிப்பை வரவழைத்துக்கொள்ள முடியவில்லை.

"உஸ்மான் சௌக்யமாக இருக்கிறானா?"

"அப்படித்தான் நினைக்கிறேன் ஷபனு!"

அந்த இருவருடைய முகமும் களிப்பினால் மலர்ந்தது. கர்னல் ஜீப் காரைக் கிளப்பினார்.

"ஷபனு இங்கே வா" என்று கூப்பிட்டேன். அவன் அருகில் வந்ததும் மூன்று பத்து ரூபாய் நோட்டுகளைக் கையில் கொடுத்தேன்.

"உஸ்மான் இந்தப் பணத்தைக் கொடுத்து அனுப்பினுன்" என்று கூறி அவன்கன்னத்தைத் தட்டி தலைமயிரைக் கோதிவிட்டேன்.

"எஜமான்...உஸ்மானிடம் சொல்ல வேண்டாம் என்றேனே..." என்று மறுக்கும் பாவனையில் ஷபனு கேட்டான்.

நான் பதில் சொல்லவில்லை. ஜீப் வேகமாகக் கிளம்பி விட்டது.

ஸ்ரீநகரில் ஒருவாரம் இருந்தேன். மீண்டும் ஒரு முறை நான் ஊரிக்குப் போக வேண்டியிருந்தது. உஸ்மானுடைய மரணத்தைப் பற்றி இதற்குள் ஷபனுவும் அவனுடைய தாயாரும் தெரிந்து கொண்டிருப்பார்கள் என்பது நிச்சயம். இப்போது நான் ஷபனுவை சந்திக்க விரும்பவில்லை. தாங்க முடியாத துயரத்திஞல் கறுத்துப் போயிருக்கும் அச்சிறுவர்களின் களையிழந்த முகத்தை நான் காண விரும்பவில்லை.

ஆயினும் என் இதயம் அவர்கள் முகத்தைக் காணவே துடித்தது. காஷ்மீர மக்களின் உணர்வின் சின்னமாக விளங்கிய அந்தச் சின்னஞ்சிறு தேவதைகளின் களை பொருந்திய முகத்தைக் காண என் மனம் விழைந்தது. ஒற்றுமையின் உருவகமாகவும் உள்ள உறுதிக்கு இலக்கணமாகவும் எதிரிகளால் பாழ் அடைந்த ஊர்கள் பண்படுத்தப்பட்டு வரும் உத்வேகத்துக்குச் சின்னமாகவும் திகழ்ந்த அவர்களுடைய களங்கமற்ற முகத்தை என்று காண்பேன்?

இப்பொழுதெல்லாம் காஷ்மீரத்தைப் பற்றிய நினைவு வரும்போது பல்வேறு முனைகளிலும் இந்திய ராணுவத்தினர் ஆற்றிவரும் மகத்தான வேலைகளைப் பற்றியும், தலைவர்கள் பேசும் பிரமாண்டமான பொதுக்கூட்டங்களைப் பற்றியும் அவ்வளவாக நினைவுக்கு வருவது இல்லை. முட்டை விற்பனை செய்து குருடான தாய்க்கு உதவும் ஷபனு அவனுடைய சகோதரன் ஆகிய இருவருடைய உருவம்

தான் என் கண்ணெதிரே புலப்படுகிறது. விடுதியின் முற்றத்தில் வெயிலிலமர்ந்து என்னுடைய பூட்சுகளுக்குப் பாலிஷ் போடும் அவர்கள் என் கண்ணெதிரே இருக்கிறார்கள். 'பராமுலாவுக்கு மீண்டும் வாருங்கள்' என்று கூறும் அவர்களுடைய வார்த்தைகள் என் காதுகளில் ஒலிக்கின்றன.

இருவருடைய உருவமும் என் கண்ணெதிரே நிழலாடும்போது, 'புதிய காஷ்மீரம் மலர்ந்து விட்டது. அதனுடைய சுதந்திரத்தையோ, பெருமையையோ உலகிலுள்ள எந்த சக்தியினாலும் பறிக்க முடியாது' என்று எனக்கு நானே சொல்லிக்கொள்வேன்.

# சுதந்திரத்தின் விலை

---

பின்புறம் பொருத்தப்பட்டிருந்த மின்சாரவிசிறிசத்த மின்றிச் சுழல ஆரம்பித்தது. கையில் பிடித்திருந்த காலைப் பத்திரிகையின் இதழ்கள் அந்தக் காற்றுப் பட்டு ஆடியது.

" வணக்கம் " என்று முணுமுணுத்த மந்திரி மெத் தென்றிருந்த நாற்காலியில் வசதியாக சாய்ந்து கொண்டார். இரண்டு நாட்களுக்கு முன்பு ரேடியோவில் ஒலிபரப்பப் பட்ட அவரது பேச்சு அன்றையப் பத்திரிகையில் முதல் பக்கத்தில் எடுப்பாகப் பிரசுரிக்கப்பட்டிருந்தது.

' பிரமாண்டமான கஷ்டங்களை நாம் சமாளிக்க வேண் டியிருக்கிறது. அகதிகளுக்கு வீடும் வேலையும் தரவேண்டும் என்று நாம் விரும்புகிறோம். அதற்குப் பல தடைகள் குறுக்கிடுகின்றன. ஆயினும் சாத்தியமான அளவு செய் திருக்கிறோம். துரதிர்ஷ்ட சாலிகளான அகதிகள் ஒவ்வொரு வருக்கும் ஒரு வீடும் வேலையும் பெற்றுத் தரும் வரையில் தொடர்ந்து நமது பணியைச் செய்து கொண்டிருப்போம். இது மிகப் பெரிய காரியமாகும். மக்களுடைய ஒத்துழைப் புக்கிடைத்தால்தான் அதில் வெற்றி பெற முடியும். எனவே அகதிகளை நான் வேண்டிக்கொள்கிறேன்...'

கண்ணெதிரே ஒரு மனிதன் வந்து நிற்பதைக் கண்டு மந்திரி தலை நிமிர்ந்து பார்த்தார்.

"இப்போது சரியாக இருக்கிறதல்லவா ? மின் விசிறி"

மந்திரி அவனைக் கூர்ந்து பார்த்தார். சிவப்பு தலைப்பாகையும் இளம் தாடியும், துடிக்கும் கண்களும் நீண்ட நாசியும் உறுதியான கைகளும் கொண்ட அவனைப் பார்த்தார். கடந்த இருபது நிமிடங்களாகக் கருவிகளை சத்தப்படுத்திக் கொண்டும், இருமிக்கொண்டும் அவன் மின்சார விசிறியைச் சரி செய்து கொண்டிருந்தான். அதுவரை அவனைப்பார்க்கா விட்டாலும் ஒருவன் அறையில் இருக்கும் உணர்வு அரை குறையாக மந்திரிக்கு இருந்தது.

"ஓ நீ தானா அது? அருமையான ஆள் ! சீக்கியன். ஒருவேளை அகதியோ..." என்று அவர் மனதில் எண்ணினார்.

"விசிறி இப்போது சரியாக இருக்கிறது" என்றார் புன்னகை செய்துகொண்டே.

இளைஞன் அங்கிருந்து நகரவில்லை.

"என்ன ? கூலி வேண்டுமா? போய் என்னுடைய காரியதரிசியைப் பார். அவர்..."

"இல்லை. பணத்துக்கு இல்லை"

"பின் என்ன வேண்டும் ?"

"உங்களுடன் கொஞ்சம் பேச விரும்புகிறேன்...தனிமையில்."

மந்திரி அவனைக்கூர்ந்து பார்த்தார். வியப்படைந்தவரைப் போல் இளநகை செய்தவாறே, "நான் இப்போது தனியாகத்தானே இருக்கிறேன்" என்றார்.

"நான் செய்த குற்றத்தை உங்களிடம் கூறப்போகிறேன். அதற்காக உங்களுடைய மன்னிப்பை வேண்டுகிறேன்."

மந்திரி கண்களைச் சுருக்கிக்கொண்டு "என்ன?" என்று கேட்டார்.

“நான் சொல்வதைக் கேட்டபின்னர் நீங்கள் விரும்பினால் என்னைக் கைதுசெய்யச் சொல்லலாம்” என்று அவன் விசித்திரமான பாவனையில் கைகளை நீட்டினான்.

“ஆயினும் அதை...அதை உங்களிடம் சொல்லிவிட வேண்டும் என்று என் மனம் துடிக்கிறது”—சரியான வார்த்தை கிடைக்காமல் அவன் தடுமாறினான்.

“ உம் சொல்லு”

“ இரண்டு நாட்களுக்கு முன்பு உங்களைக்கொன்றுவிட இருந்தேன்.”

மந்திரி அசையாமல் அவன் கண்களையே ஊடுருவிப் பார்த்தார். உதட்டில் அரும்பியிருந்த புன்னகை மறைந்தது.

“ நீ விரும்பினால் இப்போது கூட என்னைக் கொன்றுவிடலாம்—கடமையினாலும் கவலையினாலும் ஏற்பட்ட சுமையிலிருந்து விடுபட எனக்கும் மகிழ்ச்சிதான்...” என்றார்.

“ இல்லை. இல்லை” என்று கூறிய இளைஞன் குனிந்து மந்திரியின் பாதங்களைத் தொட்டான்.

“ உங்கள் உயிரைப் போக்க நான் விரும்பவில்லை. அந்த வெறி இப்போது தணிந்துவிட்டது. ஆனால் ஒரு சமயம் அந்த வெறி எனக்கு இருந்தது என்பதைக் கூற விரும்புகிறேன். கஷ்டத்தையும் கவலையையும் கண்டு வெறி பிடித்தவனாகி விட்டேன். மேற்குப் பஞ்சாபிலிருந்து வந்த அகதி நான்...”

மந்திரி மெல்லத் தலையையசைத்தார்.

“என்னுடைய பெயர் அஜீத்சிங். பெற்றோரையும் சகோதரிகளையும் அழகிய வீட்டையும் பிறந்த ஊரையும் விட்டுவிட்டு இங்கு மூன்று வாரங்களுக்கு முன்பு ஓடிவந்தேன்...” என்று கூறிய அவன் சற்று நிறுத்தினான்.

இரவு பகலாக அவன் இதயத்தை அழுத்திக்கொண்டிருந்த நினைவுகள் அவன் முகத்தில் நிழலாடின.

* * *

ஸ்டார் தியேட்டரில் கடந்த ஐம்பது நாட்களாக நடைபெற்று வரும் 'சகோதரர்கள்' என்ற நாடகத்தின் பொன் விழா கொண்டாட்டத்துக்கு அன்று மந்திரி தலைமை வகிப்பதாக இருந்தார்.

மந்திரி தியேட்டருக்குப் போகும்போது அவருக்கு உற்சாகமான வரவேற்பு கொடுப்பதற்காகச் சாலையின் இருபுறமும் பெருவாரியாக மக்கள் கூடி நின்றனர். மாவிலை தோரணங்களும் கொடிகளும் எங்கும் திருவிழாக் கோலத்தில் காட்சியளித்தன.

மந்திரி காரிலிருந்து இறங்கியதும் தேசிய கீதத்தை இசைப்பதற்குத் தயாராக ராணுவ பாண்ட் வாத்யகோஷ்டி ஒன்று நின்றுகொண்டிருந்தது. தியேட்டர் மானேஜர் தமது உதவியாளர்களுடன் கௌரவ விருந்தினரை வரவேற்பதற்குத் தயாராக அமைதியிழந்து காத்துக்கொண்டிருந்தார்.

காலைக் கதிரவன் ஒளியின் வெப்பத்திலும் அழகிலும் சூழ்நிலை ரம்மியமாக இருந்தது. மந்திரியின் காரை எதிர்பார்த்து மக்கள் எட்டி எட்டிப்பார்த்தனர்.

"அவர் தனியாக வருவாரா? தம்முடைய மகளையும் அழைத்துக்கொண்டு வருவாரா?" என்று ஒருவர்க்கொருவர் கேட்டுக் கொண்டு அது குறித்து முன்கூட்டி முடிவு தெரிவிக்கவும் செய்தனர்.

துணிந்த காரியத்தைச் செய்யத் தயாராகக் கூட்டத்தில் நின்றுகொண்டிருந்த அஜீத்சிங்குக்கு வெறுப்பினாலும் வேதனையினாலும் உடல் நடுங்கியது. சுற்றிலும் கூடியிருந்த மக்களை அவன் 'முட்டாள்கள்—கோழைகள்' என்றெண்ணினான்.

'தறிதலைகள்! எதற்காக இவ்வளவு சந்தோஷப்படுகிருர்கள்? இந்த மந்திரி இவர்களுக்கு என்ன செய்துவிட்டார்? ரோம் நகரம் பற்றி எரியும்போது பிடில் வாசித்த நீரோவைப் போல், ஆயிரக்கணக்கானவர்களுடைய வீடுகள் சூறையாடப்பட்டபோது, ஆண்களும் சிறுவர்களும் கொன்று குவிக்கப்பட்டபோது பெண்களின் கற்பு பறிக்கப்பட்டபோது வெட்டிப் பிரசங்கம் செய்துகொண்டிருந்தார்!'

டில்லிக்கு வந்ததிலிருந்தே மக்களைக்குறித்து இதுபோல் அவன் மனத்துக்குள் சபித்துக் கொண்டிருந்தான். ஆத்திரத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு எதுவுமே நடவாதது போல் வேலைகளைக் கவனிப்பதும், சாப்பிடுவதும் சினிமாக்களுக்குப் போவதும் எப்படித்தான் இவர்களுக்கு முடிகிறது என்பதை அவனுல் புரிந்துகொள்ளவே முடியவில்லை.

'குருடர்களே! பிச்சைக்காரர்களே! என் நிலையைப் பாருங்கள்' என்று ஒவ்வொரு சதுக்கத்திலும் நின்று மக்களைப் பார்த்துக் கூவ அவன் விரும்பியதுண்டு.

'என்னுடைய தந்தைக்கு நூறு ஏக்கர் வளமான பூமியும், பெரிய வீடும் தோட்டமும், குதிரைகளும் ஆடு மாடுகளும் பறவைகளும் சொந்தமாக இருந்தன என்பது உங்களுக்குத் தெரியுமா? இன்று அவருடைய மகன் வீடு வாசலற்ற ஏழைத் தொழிலாளி. இரண்டு ரூபாய்க்கு வியர்வை வடியப் பாடுபட்டு உழைக்கும் ஒரு கூலி. சிறைக் கைதிகளுக்குத் தரும் உணவைவிட மோசமானதை உண்டு வாழ்பவன் என்பது உங்களுக்குத் தெரியுமா?' என்று மக்களைக் கேட்கத் துடித்தது அவன் மனம்.

வீடிழந்து, வாழ்வில் நம்பிக்கையிழந்து தலைநகரின் வீதிகளிலே திரியும் மக்கள் துயரச் சுமையைத் துச்சமாக எப்படித்தான் தாங்கிக்கொண்டு இருக்கிருர்களோ என்றெண்ணி அவன் வியந்தது உண்டு.

அவர்கள் ஏன் புரட்சி செய்யவில்லை? பஞ்சநதி பாயும் பெருமை மிக்க நாட்டை அவர்கள் மறந்துவிட்டார்களா? அதன் வளமிக்க வயல்களும் கனிகுலுங்கும் தோட்டங்களும் நினைவுக்கு வரவில்லையா? என் தேசம்...என் தேசம் என்று அவர்கள் இதயம் துடிக்கவில்லையா?...எனக்கு மட்டும் துடிக்கிறதே!

இண்டர்மீடியட் விஞ்ஞான பாடத்தில் தேறிய அவன் என்ஜினீரிங் படிக்க உத்தேசித்திருந்தான். அவன் ஒரு பெண்ணைக் காதலித்தான்—அவளை மணந்து கொள்ள விரும்பினான். ஆனால் பிரிவினையால் அவனுடைய கனவுகள் யாவும் தவிடுபொடியாகி விட்டன. அவனைப் போன்றவர்கள் ஆயிரக்கணக்கான பேர் இருக்கலாம். இந்த நிலையைத் தங்கள் விதியென்று நம்பி ஏன் அவர்கள் கைகளைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து விட்டார்கள்? இந்த அநீதியை எதிர்க்கிறோம் என்பதை உலகுக்குத் தெரிவிக்க அவர்கள் ஏன் எதையுமே செய்யவில்லை? மற்றவர்கள் துணிந்து முன் வராவிட்டால் போகட்டும்—நான் செய்கிறேன்.

அப்போதிருந்த நிலை கண்டு அவன் வெகுண்டான். அதற்குக் காரணமாக இருந்தவர்களை வெறுத்தான். தன் வெறுப்பைப் புலப்படுத்த ஏதாவது செய்தாக வேண்டும். ஆம், ஏதாவது...பயங்கரமான—அதே நேரத்தில் வீரமான ஏதாவது ஒன்றைச் செய்தாக வேண்டும் என்று துடித்தான்.

இதன் விளைவாகத்தான் மந்திரியைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணம் அவன் மனதில் எழுந்தது. 'சகோதரர்கள்' நாடகத்தின் பொன்விழாக் கொண்டாட்டத்துக்குத் தலைமை வகிக்க வரும்போது தான் மந்திரியைச் சுட்டுவிட வேண்டும் என்ற திட்டத்தை வகுத்துக் கொண்டான்.

'சகோதரர்கள்' என்று எழுதப்பட்ட பிரம்மாண்டமான போர்டு ஒன்று தியேட்டருக்கு வெளியே வைக்கப்பட்

டிருந்தது. கூட்டத்தில் நின்றுகொண்டிருந்த அஜீத்சிங் இதைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான்.

'சகோதரர்கள்—சகோதரபாசம் என்பதெல்லாம் நாடகத்தில்தான்; வாழ்க்கையில் அல்ல. அகதிகள் எங்கிருந்து ஓடிவந்தார்களோ அந்த இடத்தில் அன்பு ஒற்றுமை பற்றிய தத்துவங்கள் யாவும் தவிடுபொடியாக்கப்பட்டிருக்கும்போது மக்கள் அமைதியுடன் வாழும் டில்லியிலே இது பற்றிய உபதேசம் எதற்கு?'

'இங்கே ஐம்பது நாடகங்கள் நடத்தியிருக்கிறார்கள்' அங்கே ஒரு நாடகமாவது நடக்க விட்டிருப்பார்களா? இந்த லட்சணத்தில்தான் ஏதோ மகத்தான சாதனையைப் புரிந்து விட்ட மாதிரி மானேஜரைப் பாராட்ட மந்திரி வருகிறாராம்! இதனைப் பார்த்துக் கைதட்ட ஆயிரக்கணக்கான முட்டாள்கள் கூடி இருக்கிறார்கள்.'

'அயோக்யர்கள்...எல்லாருமே அயோக்யர்கள். கண்களை மூடிக்கொண்டு உண்மையைக் காண மறுக்கிறார்கள். இந்த மோசமான நிலைக்கு முடிவு கட்டத்தான் வேண்டும்.

கால்சட்டைப் பையை அவன் தடவிப் பார்த்தான். மந்திரியின் கார் தான் இருக்கும் பக்கம் வரும்போது சட்டென்று எடுத்து சுடுவதற்குத் தயாராக துப்பாக்கி பத்திரமாக இருந்தது.

"நீ என்ன நினைக்கிறாய்?" என்று யாரோ அவனை சீண்டிக் கேட்டார்கள்.

"என்ன?" என்று அவன் எரிந்து விழுந்தான்.

"என்ன நினைக்கிறாய் என்று கேட்டேன். மந்திரி தனியாக வருவாரா? தம் மகளுடன் வருவாரா?"

"தனியாகவே வரட்டும்" என்றான் அவன் கடுகடுப்புடன்.

"ஏன் அப்படிச் சொல்கிருய்? நாங்களெல்லாம் அவருடைய மகளைக் காண விரும்புகிரும்" என்றது ஒரு குரல்.

தன்னுடைய வெறுப்பைக் கக்கும் எண்ணத்துடன் அஜீத்சிங் முகத்தைத் திருப்பினுன். ஆனுல் அந்தக் குரலுக்கு உரியவரைக் கண்டதும் அவன் வேகம் தணிந்தது. வெள்ளை நிற ஆடையணிந்திருந்த உயரமான ஒரு பெண் அங்கு நின்றுகொண்டிருந்தாள். குங்குமப்பூ நிறத்தில் ஒரு மேலாடை அவள் மார்பில் கிடந்தது. முட்டை வடிவ முகத்துக்கு மேலாக கருத்தடர்ந்த கேசம் காணப்பட்டது. அவள் உதடுகள் இளநகையால் மலர்ந்திருந்தன. முத்துப் போன்ற பற்கள் ஒளிபட்டுப் பளபளத்தன. அவளைப் பார்க்கும் போது தன் சொந்த ஊருக்கே போய்விட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது.

"உனக்கு இந்த ஊர் இல்லையே?"

"இல்லை நான் ஒரு அகதி. நீ?"

"நானும் தான்" என்றபோது அவன் குரலில் எரிச்சல் தொனித்தது. "உன் ஊர் எது?"

"கிலாசாஹேப்—குஜ்ரன்வாலா ஜில்லா. அங்கிருந்து முந்நூறு சீக்கியர்கள் வீடு வாசலை விட்டு ஓடி வந்தார்கள். அவர்களுடைய கோஷ்டியில் நானும் வந்தேன்."

"இந்த லட்சணத்தில்தான் கூட்டத்தில் நின்றுகொண்டு மந்திரியை வரவேற்கவும், உன்னுடைய வேலைக்காரியாக இருக்கக் கூடத் தகுதியில்லாத மந்திரியின் மகளைத் தரிசிக்கவும் வந்திருக்கிருயோ?"

இதே போல் அவன் மேற்கொண்டும் கோபமாகப் பேசிக் கொண்டே இருந்திருப்பான். தான் சொல்வதை அவள் கேட்கவில்லை; தன்னைப் பார்க்கக் கூட இல்லை என்பதை அவன் கவனித்தான்.

"லக்ஷ்மண்!...லச்சு ......எங்கே இருக்கிருய்...?" என்று சுற்றிலும் பார்த்தவளாக அவள் கத்திக் கொண்டிருந்தாள். அவள் முகத்தில் பயம் படர்ந்தது.

"ஐயோ! போய் விட்டானே" என்று மார்பில் அடித்துக் கொண்டு அரற்றினுள்.

"யார்?" என்று கேட்டான் அஜீத்சிங்.

"லச்சு...என் குழந்தை" என்று புலம்பியவாறே அவள் தன் கைகளைப் பிசைந்து கொண்டாள்.

"ஒரு நிமிடத்துக்கு முன் உன்னேடு பேசியபோது என் கையைப் பிடித்துக் கொண்டிருந்தான். இப்போது பார்த்தால் காணும். எப்போது போனுன் என்றே தெரியவில்லை. நான் என்ன செய்வேன்?...லச்சு...லச்சு எங்கேயடா போனுய்?" என்று கத்திக் கொண்டே கூட்டத்தில் புகுந்து தேடினுள். பின்பு அஜீத்சிங்குடைய தோளைப் பற்றிக் கொண்டு "தயவு செய்து எனக்கு உதவி செய். தயவு செய்து அவனைக் கண்டு பிடித்துக் கொடு" என்று வேண்டினுள்.

அவளுக்கு ஆறுதலாக ஏதோ சில வார்த்தைகளை முணுமுணுத்தபடியே அவள் கைகளைத் தட்டிக் கொடுத்தான். "கவலைப்படாதே. அவனைக் கண்டு பிடித்து விடுவோம்" என்ருன்.

"அவன் கிடைக்கா விட்டால் நான் உயிருடன் இருக்க மாட்டேன்" என்று அவள் தேம்பினுள்.

"எங்கும் போயிருக்க மாட்டான். இங்குதான் எங்காவது இருக்க வேண்டும்" என்று அவளைக் கையைப் பிடித்துக் கூடவே அழைத்துக் கொண்டு கூட்டத்தில் தேடினுன். அளவுக்கதிகமாக அவள் கவலைப் பட்டது அவனுக்கு சங்கடமாக இருந்தது.

"அதோ மந்திரியின் கார்" என்று யாரோ சொன்னுர்கள். கூட்டத்தினரிடையே சலசலப்பு ஏற்பட்டது.

அஜீத்சிங் அவளுடைய பிடியிலிருந்து தன் கையை விடுவித்துக் கொண்டு, இருந்தவிடத்திலிருந்து ஓரடி முன்னால் நகர்ந்தான். 'மந்திரி வந்து விட்டார்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். ரிவால்வரை எடுப்பதற்காக கால் சட்டைப் பைக்குள் கை விட்டான்.

ஆனால் அவள் அவனுடைய கையை மீண்டும் பற்றி இழுத்தாள். "எங்கே போகிறாய்?" என்று கண்டிப்புடன் கேட்டாள்.

"என்னை விடு. என்னைத் தனியே போகவிடு" என்று காட்டுத்தனமாகக் கத்தியவாறே அவள் பிடிப்பிலிருந்து தன் கையை விடுவித்துக் கொள்ள முயன்றான்.

படபட வென்று கை தட்டும் சத்தமும் உற்சாக ஆரவாரமும் கேட்டது.

"அதோ அவர்தான்...அது தான் அவர் பெண்."

"ஒதுங்கி நில்லுங்கள்" இது போலிஸ் மிரட்டல்.

ஒரு கணம் கூடத் தாமதிக்கக் கூடாது என்று அஜீத்சிங் எண்ணினான். கூட்டம் நிரம்பிய தெருவினூடே மந்திரியின் இளஞ் சிவப்பு நிறக் கார் கம்பீரமாக வருவதை அவனால் காண முடிந்தது.

கூட்டத்தைப் பிளந்து கொண்டு முன் வரிசைக்குப் போய் சுட வேண்டும் என்று தனக்குள் எண்ணிய அவன் அவ்வாறு செய்ய முற்பட்டான்.

ஆனால் அந்தப் பெண் அவன் மீது விழுந்து தன் பலத்தை யெல்லாம் பிரயோகித்து அவனைப் பின்னுக்கு இழுத்தாள்.

"அதோ இருக்கிறான்...அதோ பார்!" என்று அவள் கத்தினாள்.

"யார்?" என்று அவன் உறுமினான்.

"என் குழந்தை...லச்சு"...என்ற அவள் கூட்டத்துக்குப் பின்னால் இருந்த சாலையைக் காட்டினாள்.

"அதோ பார்...சாலையின் நடுவே நின்று கொண்டிருக்கிறான். ஓடு. அவனைப் பிடித்து அழைத்து வா. உம் சீக்கிரம்."

"நீயும் உன் குழந்தையும் நாசமாகப் போக" என்று சபித்தான் அஜீத்சிங். அவளை உதறித் தள்ளி விட்டுப் போயிருப்பான். பெரிய லாரியொன்று வேகமாக வந்து கொண்டிருப்பது அவன் கண்களில் பட்டது.

"ஏய்" என்று கத்திய படியே குழந்தையைக் காப்பாற்ற முன்னால் பாய்ந்தான். வாழைப் பழத் தோல் ஒன்று அவன் கால்களை வழுக்கி விட்டது. கீழே விழுந்தான். லாரி அவனை இடித்துத் தள்ளிக் கொண்டு வேகமாகச் சென்று விட்டது.

நினைவிழக்கு முன் பாண்ட் வாத்திய இசையை அவன் கேட்டான். மந்திரி தியேட்டருக்குள் போயிருப்பார். 'அட கடவுளே!' என்றவன் பெருமூச்செறிந்தான். அதன் பின் தன்னுணர்வற்ற இருளில் ஆழ்ந்து விட்டான்.

* * *

"இப்போது எப்படி இருக்கிறது?" என்ற குரல் அவனுக்குக் கேட்டது. சிரமத்துடன் கண்களை விழித்துப் பார்த்தான். குங்குமப் பூ நிற மேலாடையணிந்த பெண் தன்னருகே குனிந்து நிற்பதைக் கண்டான்.

"இப்படியாகி விட்டதேயென்று நான் எவ்வளவு வெட்கமும் வேதனையும் படுகிறேன் தெரியுமா?"

"நான் இறந்து விட்டதாக அல்லவா எண்ணிக்கொண்டிருந்தேன்."

"இல்லை. நீ மயங்கி விழுந்து விட்டாய். நான்தான் இங்கே உன்னைக் கொண்டு வந்தேன்."

"இங்கேயா? ...அதாவது...?"

"என் வீட்டுக்கு"

அஜீத்சிங் சுற்றிலும் பார்த்தான். மண் சுவர் கொண்ட ஓர் ஓலைக் குடிசை.

"இதனைப் பெரிய மாளிகை என்று நினைத்துக்கொண்டிருக்கிறாயா ?" என்று கேலியுடன் கேட்டான் அஜீத்சிங்.

"அடக்கமாக இருந்த போதிலும் அவரவர் வீடே அவர்களுக்கு அரண்மனை" என்றாள் அவள் இளநகை அரும்ப.

"உன்னைப் போன்ற ஒரு முட்டாளை நான் பார்த்ததே இல்லை" என்று அவன் சீறினான்.

வயதான கிழவர் ஒருவர் அவன் முன்னால் வந்து நின்றார். "இதைச் சாப்பிடு...சூடாக இருக்கிறது...உனக்கு இது பிடிக்கும்" என்றார் ஒரு குவளையை நீட்டி.

"இது என் தந்தை...கிருபாசிங்" என்றாள் அந்தப் பெண் அஜீத்சிங்கிடம்.

கிழவர் அருகிலமர்ந்து அவனை எழுப்பி உட்கார வைத்து வாய்க்கருகே குவளையை நீட்டினார். அஜீத்சிங் குவளையில் இருந்ததைப் பருகினான்.

"என்னுடைய மகள் சுரீந்தர் ஒரேயடியாகப் பயந்து விட்டாள்...நீ அவளை மன்னிக்கவே மாட்டாய் என்று..."

"அவள் நினைத்தது சரிதான். நான் அவளை மன்னிக்கவே முடியாது" என்று கூறிய அஜீத்சிங்கின் குரல் கடுமையாக மாறியது. "நம்முடைய எதிரியின் உயிரை அவள் காப்பாற்றி விட்டாள். அது அவளுக்கே தெரியாது. அவளைச் சந்திக்காமல் இருந்திருந்தால் இன்று அவனைச் சுட்டுக் கொன்றிருப்பேன்" என்ற அவன் தன் கால் சட்டைப் பையிலிருந்து ரிவால்வரை வெளியே எடுத்தான். "இதோ பாருங்கள் இன்று அவனைத் தீர்த்துக் கட்டி விடுவதென்று தீர்மானித்திருந்தேன்."

"நீ யாரைச் சொல்கிறாய்."

"மந்திரியை."

"என்ன ?" என்று கத்தினார் கிழவர் நம்ப முடியாத வராக. அவருடைய பெண் திகைப்பினால் வாயைப் பொத்திக் கொண்டாள்.

"மந்திரியைத்தான் சொன்னேன். ஏன் திகைத்து விட்டீர்கள்? அவனைக் கொல்வது நல்ல காரியம் என்று நீங்கள் நினைக்கவில்லையா? நான் தூக்குமேடைக்குப் போகவும் தயாராக இருந்தேன். ஆயிரக்கணக்கானவர்களுடைய துயரத்துக்கும் அவமானத்துக்கும் பழி வாங்கி இருந்திருப்பேன். உங்கள் பெண் இன்று என் வழியில் குறுக்கிட்டு விட்டாள். இன்னொரு வாய்ப்புக் கிடைக்காமலா போகும்...?"

சுடத் தயாராக இருப்பவனைப் போல் உறுதியாக ரிவால்வரைப் பற்றி முன்னால் நீட்டிய அவன் பற்களைக் கடித்த வண்ணம் "இந்த ஆயுதத்தை கொண்டு எல்லாவற்றையும் சரிசெய்து விடுகிறேன்" என்றான்.

கிருபாசிங் ஒரு கணம் அவனை வெறித்துப் பார்த்தார். பின்னர் "இல்லை...கூடாது" என்று தலையையாட்டினார்.

"ஏன் கூடாது?"

"இந்த வழியில் பிரச்னைகளைத் தீர்க்க முடியாது என்று சொல்கிறேன். இதனால் பிரச்னை மேலும் மோசமாகத்தான் போகும்."

"உங்களுக்கு வயதாகி விட்டது. அதனால் அப்படிச் சொல்கிறீர்கள். செயல்படப் பயப்படுகிறீர்கள்—கோழைகள்" என்ற அஜீத்சிங்கின் குரலில் ஏளனம் தொனித்தது.

கிருபாசிங் அதனைப் பொருட்படுத்தவில்லை. "வீரர்கள் எப்போதுமே கொன்றுகொண்டிருக்க வேண்டியது இல்லை" என்ற அவர் இளநகையுடன் இளைஞனுடைய தோள்களை வருடினார்.

"தம்பி! நான் சொல்வதைக் கேள். நாம் வீடிழந்தோம். உற்றாரை—உடைமைகளை இழந்தோம். அத்துடன் நம்முடைய பொறுமையையும் இழந்து விடுவதால் அடையப் போகும் லாபம் என்ன—ஆத்மாவையும் நாம் இழந்துவிட வேண்டுமா?"

"ஆனால்..." குறுக்கிட்டு வாதம் செய்ய விரும்பினான் அஜீத்சிங்.

"நீ என்ன சொல்வாய் என்று எனக்குத் தெரியும். நான் கூறுவதைக் கேள். என்னுடைய கதையை நீ கேட்க வேண்டும். குஜ்ரன்வாலா ஜில்லாவிலுள்ள கிலா சாஹேப் என்னுடைய ஊர். பல தலைமுறைகளாக எங்கள் குடும்பம் அந்த ஊரில் இருந்து வந்தது. எனக்கு எழுபது ஏக்கர் நிலமும் பெரிய வீடும் உடைமைகளாக இருந்தன. பிள்ளைகள், பெண்கள், மருமகள், பேரக்குழந்தைகள், வேலைக்காரர்கள் என்று வீடு நிறைந்து இருக்கும். பிரிவினையினால் எங்கள் வீட்டையும்வாழ்வையும் இழந்தோம். என்னுடைய பிள்ளைகளில் மூன்று பேரும், பெண்களில் இருவரும் கொல்லப்பட்டனர்" என்ற அவர் மேற்கொண்டு சற்று நேரம் பேசவில்லை. தாங்கமுடியாத துயரத்தை அடக்கிக்கொண்டவரைப் போல எச்சிலைக் கூட்டி விழுங்கினார்.

"இங்கு வந்து சேர்ந்தோம். எங்களுக்கென புது வாழ்வை அமைத்துக் கொள்ளத் தொடங்கினோம். ஒரு பிள்ளைக்கு ரேடியோ ஷாப் ஒன்றில் வேலை கிடைத்தது. அதில் அவன் கெட்டிக்காரன். அதோ மூலையில் இருக்கும் ரேடியோவைப் பார். அது அவனே செய்தது. என்னுடைய மற்ற பிள்ளைகள் சாந்த்னி சவுக்கில் சப்பாத்திக் கடை போட்டிருக்கிறார்கள். சுரீந்தர் தையல் வேலை செய்து கொஞ்சம் சம்பாதிக்கிறாள். நான் துணிகளை வெளுக்கிறேன். இப்படித்தான் எங்கள் வாழ்க்கை நடக்கிறது."

"கேவலம் நாய்ப்பிழைப்பு. அது உங்களுக்கே வெறுப் பாக இல்லையா?"

"வேலையை வெறுப்பதால் ஒருவித லாபமும் இல்லை. தம்பி, அகதிகளாகிய நாம் மிகவும் துரதிர்ஷ்டசாலிகள். அது குறித்து சந்தேகமேயில்லை. ஆயினும் குரோதமும் கொலை யும் நமக்கு எவ்விதத்திலும் உதவாது. கத்தியும் குண்டும் நமது கஷ்டங்களைப் போக்காது; பிரச்னைகளைத் தீர்க்காது. நாம் பொறுமையுடனிருந்து புயலில் வீடிழந்த பறவைகள் மீண்டும் தங்கள் கூட்டைக் கட்டிக்கொள்வதைப் போல் நம்முடைய புனர்வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும்..."

"புயலை எழுப்பியவர்கள் யார்? ஏன்? எதற்காக?" என்று ஆத்திரத்துடன் அஜீத்சிங் குறுக்கிட்டான். "அது நம்முடைய செயலா? தேசப் பிரிவினைக்கு ஒப்புக்கொண்ட வர்கள் நம்முடைய அனுமதியைக் கேட்டார்களா? நம் முடைய உயிரையும் உடைமையையும் பறிபோகவிட்டுப் பிச்சைக்காரர்களாகத் திரியவிட அவர்களுக்கு என்ன உரிமை?"

"பிச்சைக்காரர்களா?...அந்த வார்த்தையை வாபஸ் பெற்றுக்கொள். எனக்கு அது பிடிக்காது. நாம் பிச்சைக் காரர்களல்ல. நாம் காசு இல்லாதவர்களாக இருக்கலாம்; குடியிருக்க வீடில்லாதவர்களாக இருக்கலாம். ஆனால் பிச்சைக்காரர்களல்ல. டில்லிக்கு வந்துள்ள ஆயிரக்கணக் கான அகதிகளில் ஒருவர்கூட வீதியில் பிச்சையெடுப்பதைக் காணமுடியாது. சாந்தினி சவுக்குக்கு போய்ப்பார். வீதியில் அமர்ந்து துணி, பழம், உணவு, சோப்பு, சீப்பு ஏதாவது விற்று அவர்கள் கௌரமாக வாழ்வதைக் காண்பாய். அந்த உணர்ச்சிதான் வீழ்ந்துவிட்ட நம்மைக் கைதூக்கி விட்டு வாழ வழிவகுக்கும். கொல்வது மேலும் பல கொலை களுக்குத்தான் வழிசெய்யும். ஒருவரைக் கொல்வதற்கு

உனக்கு இருக்கும் சக்தியில் நம்பிக்கை வைக்காதே. நமக்கு வேண்டியது கொலை செய்வதற்கான துணிவு அல்ல; எதிர் பாராமல் ஏற்பட்டு விட்டதை ஏற்றுக்கொள்ளும் துணிவு தான் வேண்டும். சோதனைகளைத் தாங்கி சங்கடங்களை தீர்த்து நிலைமையைச் சீர்பட வைப்போம். நாம் பிச்சைக் காரர்களல்ல...''

கவனத்துடன் கேட்டுக்கொண்டு வந்த அஜீத்சிங்கின் சிரம் தாழ்ந்தது. கண்கள் பாதி மூடியிருந்தன. கிழவரின் வார்த்தைகளைக் கிரகித்துக்கொள்ள முயல்பவனைப் போல் அவன் காணப்பட்டான்.

"நம்முடைய கஷ்டங்களைக் கண்டு நாம் கோபமோ அவமானமோ கொள்ளத் தேவையில்லை. அது குறித்து நாம் பெருமைப்பட வேண்டும். நாட்டின் விடுதலைக்கு நாம் அளித்த விலை அது. தேச விடுதலைக்காக நாம் போர் புரிந் திருந்தால் ஆயிரக்கணக்கான பேர் கொல்லப்பட்டிருக்க மாட்டார்களா? வீடுகள் தீக்கிரையாகி இருக்காதா? போருக்குப் பதிலாகப் பிரிவினை ஏற்பட்டது என்று எண்ணிக்கொள்வோம். விடுதலைப் போரில் உற்றாரையும் உடைமைகளையும் இழந்தோம் என்று வைத்துக்கொள் வோம். நமது நாடு விடுதலை பெறுவதற்காக நாம் அநாதை கள் ஆனோம். விடுதலைக்காக நம்முடைய ரத்தத்தைச் சிந்தி னோம். சுதந்திர தேவியின் பலிபீடத்தில் இட்ட காணிக்கை யாக நமது கஷ்டங்களைக் கருதுவோம்.''

புன்னகையுடன் கிழவர் தம் கைகளை நீட்டினார். அஜீத் சிங் தன் கையில் பிடித்திருந்த ரிவால்வரை அவரது நீட்டிய கரத்தில் வைத்தான்.

சுரீந்தர் தன் குழந்தையுடன் ரேடியோ முன் அமர்ந்து அதன் 'சுவிட்சை'த் திருப்பிக்கொண்டிருந்தாள். பாட்டு எதுவும் கேட்கவில்லை. ஆழ்ந்த குரலில் ஒருவர் பேசுவது கேட்டது. அது யாருடைய குரல் என்பதைத் தெரிந்து

கொண்ட அவள், "அப்பா கேள். மந்திரி பேசுகிருர். ஒரு மணிக்கு மந்திரி பேசப்போகிருர் என்று அண்ணு சொன்னது இப்போதுதான் நினைவுக்கு வருகிறது கேளுங்கள்" என்ருள்.

கிழவரும் அஜீத்சிங்கும் கேட்டார்கள்.

"அகதிகள் அடக்கத்துடனும் பொறுமையுடனும் நடந்துகொள்ள வேண்டும் என்று நான் வேண்டிக் கொண்டது போலவே பொதுமக்களும் இந்தத் துரதிர்ஷ்டசாலிகளான தங்கள் சகோதர சகோதரிகளிடம் அனுதாபத்துடனும் நன்றியுணர்வுடனும் நடந்துகொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்று நாம் அனுபவிக்கும் சுதந்திரம் வீடிழந்து எண்ணற்ற தொல்லைகளுக்குள்ளானவர்கள் அனுபவித்த துயரங்களின் பலனேயாகும் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். அகதிகள் அந்நிய நாட்டினர் அல்ல. நமது வாழ்வில் குறுக்கிட்டு நாம் அனுபவிக்கும் சுகத்தில் பங்கு கேட்க வந்தவர்கள் அல்ல. வருங்கால வரலாற்ருசிரியர்கள் அவர்களைத் தியாகிகள் என்று வர்ணிப்பார்கள். அவர்களுடைய தியாகத்திஞல்தான் சுதந்திரமும் அமைதியும் நமக்குக் கிடைத்தது. இதனை மக்கள் புரிந்துகொண்டு இரக்க சிந்தையிஞலல்ல—நன்றிக் கடன் தீர்க்கும் முறையில் அகதிகளுக்கு உதவவேண்டும். இவ்வாறு மக்கள் நடந்து கொள்வார்களேயாஞல் நம்மால் சாதிக்க முடியாத காரியங்கள் எதுவுமே இராது. ஜெய் ஹிந்த்—"

*　　　*　　　*

நடந்தது நடந்தபடியே எல்லாவற்றையும் கூறிவந்த அஜீத்சிங் "இரண்டு நாட்களுக்கு முன் நடந்தது இது" என்ருன்.

"அது என்னை முற்றிலும் புதிய மனிதஞக மாற்றி விட்டது. என் உள்ளத்தில் இப்போது கோபமோ, வெறுப்போ, அவமான உணர்ச்சியோ கிடையாது. மாருக

நான் ஒரு அகதி என்பதில் பெருமை அடைகிறேன். நாட்டின் விடுதலைக்காக நாம் கஷ்டங்களை மேற்கொண்டோம் என்பதிலே மகிழ்ச்சி அடைகிறேன். உங்களைக் கொல்ல எண்ணியதற்காக என்னை மன்னித்து விடுங்கள். நான் ஒரு கோழை. தாங்கள் மகாவீரர். வீரனாக விளங்க எனக்கு கற்றுக் கொடுத்தீர்கள்.''

''இல்லை. கிருபாசிங்தான் உனக்கு வீரத்தைக் கற்றுத் தந்தார். அவர் மிகப் பெரியவர். இந்த நாட்டில் கிருபா சிங்கைப் போன்றவர்கள் இருக்கும் வரை நமக்கு எதிர் காலம் பிரகாசமாக இருக்கும். அடுத்த முறை அவரைப் பார்க்கும்போது என்னுடைய வணக்கத்தை அவரிடம் தெரிவி. அவரைப் பார்க்க முடிந்தால் மிகவும் மகிழ்ச்சி யடைவேன் என்றும் சொல்...சொல்கிறாயா?''

''சொல்கிறேன். அவரும் தங்களைப் பார்க்க முடிந்தால் மகிழ்ச்சியடைவார்.''

''சரி போய் வா'' என்று கூறிய மந்திரி நிமிர்ந்து உட்கார்ந்து முன்புறம் குனிந்து தமது கையை நீட்டினார்.

அஜீத்சிங் கை நடுங்க அவரது கரத்தைப் பற்றினான். பின்னர் இரண்டு தினங்களுக்கு முன்பு தான் கொல்ல எண்ணியவருடைய கையை உறுதியாகவும் நேசபாவத்துடனும் பற்றிக் குலுக்கினான்.

# லட்சியப் பெண்

மாரிக் காலம் மெல்ல நெருங்கிக் கொண்டிருந்தது. ஜீலம் நதி அமைதியாகக் காட்சியளித்தது. காற்றில் மர இலைகள் சலசலத்துக் கொண்டிருந்தன. வெப்பத்தை நாடி பஞ்சாபுக்குச் சென்றுவிடும் பறவைகள் இன்னும் போய்விடவில்லை. மரங்களிலிருந்தும் நாணற் புதர்களி லிருந்தும் பல விதமான பறவைகளின் ஒலி கேட்டுக் கொண் டிருந்தது. குளிர்காலம் வந்து விட்டால் காஷ்மீரத்தின் மலைச் சிகரங்களிலும், பள்ளத்தாக்குகளிலும் பனி படிந்து மூடிக்கொண்டு விடும். கோடையிலோ கோலாகலமாக விளங்கும். அந்த ரம்யமிகு தோற்றம் இன்னமும் மறைந்து விடவில்லை.

ஜீலம் நதியில் தன் சிறு படகைச் செலுத்திக் கொண்டு வந்த ஸோனி சுற்றிலும் நிலவும் அழகுக் காட்சியை ரசித்த தாகவே தெரியவில்லை. படகு மெல்லப் போய்க்கொண் டிருந்தது. வீட்டுக்குப் போக வேண்டுமென்ற ஆவல் அவள் நெஞ்சில் நிறைந்திருக்க வில்லை. வீட்டுக்குப் போனால் போதிய உணவும் உடையும் இன்றி வாடும் தன்னுடைய

மூன்று குழந்தைகளும் ஓடி வந்து தன்னைக் கட்டிக்கொண்டு விடும். அவர்களுடைய ஸ்பரிசமும் பேச்சும் தன் துயரத் தைத் தான் அதிகரிக்கும் என்பது அவளுக்குத் தெரியும். தன் இயலாமையையும் வறுமையையும் அதிகமாக உணர்ந்து வருந்தவே அது வழிவகுக்கும் என்பதை அவள் அறிவாள்.

மணவாழ்வில் அவள் அனுபவித்த இன்பம் மிகமிகக் குறைவு. அவளுடைய கணவன் ரஸூலா இரண்டு மாதங் களுக்கு முன்பு அவளைக் கைவிட்டுப் போனதும் பெருந்துய ரத்தில் அவள் ஆழ்ந்து விட்டாள். அவன் எங்கே போயி ருப்பான் என்று அவளால் யூகிக்க முடியவில்லை. அவனைப் பற்றிய தகவல் எதையும் தெரிந்துகொள்ளவும் முடிய வில்லை. ரஸூலா தன்னையும் குழந்தைகளையும் தவிக்க விட்டுப் போயே விட்டான் என்ற முடிவுக்கு வந்ததும் தானே உழைத்துக் குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டியது தான் என்ற தீர்மானத்துக்கு வந்தாள். அதிர்ஷ்ட வச மாகத் தன்னுடையது என்று சொல்லிக் கொள்ளக் கூடிய நிலம் கொஞ்சம் இருந்தது. அதில் காய்கறிகளைப் பயிரிட் டாள். அதில் விளைந்த கறிகாய்களைப் படகில் ஏற்றிக் கொண்டு காலையில் புறப்பட்டு விடுவாள். ஸ்ரீநகர் சந்தையில் அவற்றை விற்றுப் பணமாக்கிக் கொண்டு மாலையில் திரும்புவாள். இரண்டு மாத காலத்துக்கு இது நன்றாகத்தான் நடந்தது.

குளிர்காலம் விரைவிலேயே வந்து விடும் என்பதை ஸோனி அறிவாள். அத்துடன் அவளுடைய இந்த வரு வாய்க்கும் வழியில்லாமல் போய்விடும். இந்தக் கவலை அவளுடைய மனதை வருத்தியதால் சுற்றிலும் நிலவிய அழகை ரசிக்கக்கூடிய நிலையில் அவள் இல்லை. பறவை களைக் காணும் போது அவளுடைய மனவேதனை தான் அதிகரித்தது. அற்ப ஜந்துக்களான இந்தப் பறவைகள்

கூடத் தங்கள் கூட்டை விட்டுப் போகாமல் இருக்கும் போது ரஸூலா தன்னைக் கைவிட்டுப் போய்விட்டானே என்ற அவமான உணர்வை அது கிளறிவிட்டது.

சிந்தனையில் தன்னிலை மறந்தவளாக வந்து கொண்டிருந்த ஸோனி தன் கிராமத்தை அடைந்து விட்டதைக் கூடக் கவனிக்க வில்லை. மெல்லப் படகைச் செலுத்திக் கொண்டிருந்தாள்.

"ஸோனி...ஸோனி" என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டுத் தான் அவள் சிந்தனையிலிருந்து விடுபட்டுத் தன்னுணர்வு வரப்பெற்றுத் திரும்பிப் பார்த்தாள்.

அடுத்த வீட்டுக்காரக் கிழவி பாதிமா கரையில் நின்ற படி கையையாட்டி அவளைக் கூப்பிட்டாள்.

ஸோனி படகை இடது புறம் திருப்பிக் கரையை நோக்கிச் செலுத்தினாள்.

"ஸோனி இன்று ஏன் இவ்வளவு நேரம்? அவன் வந்து உனக்காகக் காத்துக் கொண்டிருக்கும் போது இப்படிப் போய் விட்டாயே! வெட்கமாயில்லை."

"அவனா? யார்?" என்று கேட்டாள் ஸோனி.

"வேறுயார்? உன்னுடைய நாடோடிக் கணவன் தான்" என்றாள் பாதிமா. "அல்லா இன்னும் அவனை ஏன்தான் விட்டு வைத்திருக்கிறாரோ? அந்தப் போக்கிரியைச் சபிப்பதைத் தவிர என்னால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை. இப்படி மோசமான ஒருவனை நான் கண்டதே இல்லை."

இதற்குள் ஸோனி கரைமீது ஏறி வந்து விட்டாள். கிழவியின் கையைப் பற்றிக்கொண்டு, "இப்படியெல்லாம் என் புருஷனைத் திட்டக் கூடாது. காலித் தனமாகத் திரிந்தாலும் அவர் என் கணவர் அல்லவா? என்னையும் குழந்தைகளையும் நினைவில் வைத்துக் கொண்டு திரும்பி வந்திருக்கிறாரே இதுவே பெரிய விஷயம் இல்லையா? அவரைத் தூற்றாதே வா, வா" என்றாள்.

கிழவியைப் பொருட்படுத்தாமல் அவள் ஓடத் தொடங்கினாள். கிழவி திட்டிக்கொண்டே பின்னால் தடுமாறியபடி வந்து கொண்டிருந்தாள். ரஸூலா வந்து விட்டான் என்ற எண்ணம் அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. கடந்த இரண்டு மாதங்களில் தான் பட்ட கஷ்டம் யாவும் அவளுக்கு மறந்து விட்டது. வீட்டுக்குப் போய் ரஸூலாவைக்காண வேண்டும் என்ற ஆவல் மேலோங்கியது.

வெளிக்கதவைத் தாண்டி உள்ளே நுழைந்ததும் குழந்தைகள் மகிழ்ச்சியுடன் வெளியே ஓடிவந்தன. அவர்களுடைய வாயிலும் கையிலும் தின்பண்டங்கள் இருந்தன. உடலைப் புதிய உடை அலங்கரித்திருந்தது.

" அம்மா...அம்மா...அப்பா என்ன கொண்டு வந்திருக்கிறார் பார் " என்று அவை உற்சாகமாகக் கத்தின.

கணவன் வந்து விட்டான் என்பதே ஸோனியைக் களிப்பில் ஆழ்த்திவிட்டது. குழந்தைகள் கண்ணெதிரே குதித்துக் கும்மாளம் போடுவதைக் கண்டு ஆனந்தம் தாங்காமல் அவளுக்கு அழுகையே வந்து விட்டது.

ரஸூலாவைப் பற்றித் தவருக எண்ணியதற்காக அவள் தன்னையே நொந்துகொண்டாள். இனிமேல் இப்படியெல்லாம் கணவனைச் சந்தேகிக்கக் கூடாது என்று அச்சமயம் சபதமும் செய்து கொண்டாள்.

அவளைக் கண்டதும் ரஸூலா ஹூக்காவை அப்பால் நகர்த்தி விட்டு "ஸோனி வந்து விட்டேன். பார்த்தாயா?" என்ருன். "நான் வரவே மாட்டேனென்று பயந்து கொண்டிருந்தாய் போலிருக்கிறது."

ஸோனி அவனருகில் சென்றமர்ந்தாள். "நீ வந்தாயே அதுவே போதும். எனக்கு மிகவும் சந்தோஷம்"—இவ்வளவுதான் அவளால் சொல்ல முடிந்தது. தொண்டையில் ஏதோ அடைப்பது போலிருக்கவே அவள் மௌனமாகி

விட்டாள். வேறு எதுவும் பேசவில்லை. கணவன் சொல்வதைக் கேட்பதுடன் திருப்தியடைந்தாள்.

ரஸூலா நிறையப் பணம் சம்பாதித்திருப்பான் போல் தோன்றியது. "இனிமேல் நாம் பணக்காரர்கள்" என்று அவன் திரும்பத் திரும்பச் சொன்னான். எப்படி தனக்கு அவ்வளவு பணம் கிடைத்தது என்று அவன் சொல்லவேயில்லை. ஸோனியும் அதனை அறிந்துகொள்ள விரும்பவில்லை. சற்று நேரத்துக்குப் பின் அவள் எழுந்து தேநீர் தயாரிக்கச் சென்றாள்.

"இரண்டு மாதகாலமாக உப்பு இல்லாமலே காலத்தை ஓட்டிவிட்டோம். உப்பு கோதுமை போன்ற பல பொருள்கள் இங்கு வராமல் தடுக்கப்பட்டு விட்டதாக சொல்லிக் கொள்கிறார்கள். உனக்கு தெரியுமா? ரஸூலா? இப்போது சமையல் எல்லாம் உப்பு இல்லாமல்தான்."

"தெரியும், தெரியும்" என்ற ரஸூலா ஒரு பெரிய பொட்டலத்தை எடுத்து நீட்டினான். "இதோ பார்! இது என்ன தெரியுமா? உப்பு. இதுபோல் நிறையப் பொட்டலங்கள் கொண்டு வந்திருக்கிறேன். துணி, சில்க் இன்னும் உனக்குத் தேவையானதெல்லாம் கொண்டுவந்திருக்கிறேன். நாம் பணக்காரர்களாகப் போகிறோம்."

"பக்கத்து வீட்டுக்காரர்களுக்குக் கொஞ்சம் உப்பு கொடுக்கட்டுமா? அவர்கள் மிகவும் மகிழ்ச்சியடைவார்கள்."

"ஓ...கொடேன். ஏன் கொடுக்கக்கூடாது? ஒரு சில பொட்டலங்கள் உப்பைக் கொடுப்பதன் மூலம் மக்களை மகிழ்ச்சியடையச் செய்ய முடியுமானால் தாராளமாகச் செய்யலாம்."

அரை டஜன் உப்புப் பொட்டலங்களை எடுத்துக் கொண்டு வெளியே ஓடினாள். பாதிமாவையும் இதர பெண்களையும் உரத்துக் கூப்பிட்டபடி பொட்டலங்களைத்

தூக்கிக் காட்டி உற்சாகமாக "என்ன கொண்டு வந்திருக்கிறேன் பாருங்கள்" என்று கத்தினாள்.

"உன் புருஷனுக்கு எங்கேயிருந்து இவ்வளவு உப்பு கிடைத்தது? பாகிஸ்தானுக்குப் போய்விட்டு வந்தானா?" என்பது போன்ற கேள்விகளை அவர்கள் அடுக்கினர்.

ஸோணியால் அவர்களுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. ஏனெனில் அவளுக்கே அது தெரியாது. அப்போதைக்கு அவள் மகிழ்ச்சியுடன் இருந்தாள். அதுவே அவளுக்குப் போதுமானதாக இருந்தது.

அன்றிரவு அவள் அடைந்த இன்பம் பரிபூரணமாக இருந்தது. எனவே, 'இரண்டு தினங்கள்தான் தங்குவேன். திங்கள் கிழமை காலையில் மீண்டும் போய்விடுவேன்' என்று ரஸுலா சொன்னபோது அது அவளுக்கு வேதனையளிப்பதாக இருக்கவில்லை.

"எங்கே போகிறாய்?" என்று ஸோணி கேட்க விரும்பினாள்; ஆனால் கேட்கவில்லை. ரஸுலா தானே சொல்வான் என்று அவள் எண்ணினாள். அப்படியே சொல்லாவிட்டாலும் அதனால் என்ன குடிமுழுகிப் போய்விடப் போகிறது?

"எனக்கு முக்கியமான வேலை இருக்கிறது. நாள் முழுவதும் வரமாட்டேன். அதற்காக கவலைப்பட மாட்டாயே"

"மாட்டவே மாட்டேன். ஆனால் இரவில் திரும்பி வந்துவிடவேண்டும். என்ன?"

"கட்டாயம் வருகிறேன்" என்று சிரித்தவாறே கூறிவிட்டு ரஸுலா போய்விட்டான்.

ரஸுலா இல்லாமல் பொழுதைப் போக்குவது ஸோணிக்குக் கஷ்டமாக இருந்தது. பொழுது சாவதானமாகச் சென்றுகொண்டிருந்தது. மாலை வந்ததும் அவள் மனதில் மகிழ்ச்சி பிறந்தது. கொஞ்சம் மளிகை சாமான்களும் இறைச்சியும் வாங்குவதற்காக வெளியே சென்றாள். ரஸுலாவுக்கு இரவில் பிரமாதமான விருந்து செய்ய விரும்பினாள்.

இறைச்சிக் கடைக்குச் சென்று உயர்ந்த ரக இறைச்சி தரு மாறு கேட்டபோது கடைக்காரன் வாஸிர் அவளைப்பார்த்து சிரித்தான்.

"திடீரென்று பணக்காரியாகிவிட்டாய் போலிருக் கிறதே ஸோனி?" என்று அர்த்த பாவத்துடன் சிரித்துக் கொண்டே கேட்டான் வாஸிர். அந்தக் கேள்வியின் அர்த் தத்தை ஸோனியால் பரிபூரணமாகப் புரிந்துகொள்ள முடியவில்லை.

"அப்படியொன்றும் இல்லை வாஸிர் மாமா! ரஸூலா கொஞ்சம் பணத்துடன் வந்தான். இன்றிரவு கொஞ்சம் நல்ல சாப்பாடாகப் போடலாமென்று நினைத்தேன்."

"ரஸூலாவுக்கு எங்கிருந்து பணம் கிடைத்தது? உனக்குத் தெரியுமா ஸோனி?" என்று கேட்டான் வாஸிர் தன் கண்களைச் சிமிட்டிக்கொண்டே.

"கணவனுக்கு எங்கிருந்து பணம் வருகிறது என்று ஒரு நல்ல மனைவி ஏன் கவலைப்பட வேண்டும்?" என்று கேட் டாள் ஸோனி. தன் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது என்பது அவளுடைய நம்பிக்கை.

"நீ கவலைப்படத்தான் வேண்டும். ஏனெனில் நல்ல வழியில் சம்பாதிக்கும் பணம் வேறு; தவறான வழியில் சம்பாதிக்கும் பணம் வேறு."

"தவறான வழியா?" திகைத்துத் திணறியபடி கேட் டாள் ஸோனி.

"ஆமாம். மிகமிகத் தவறான வழி. மத்தியானம் ரஸூலா இங்கு வந்தான். என்னுடைய பிள்ளைகளை அவ னுடன் அனுப்பினால் நிறையப் பணம் தருவதாக சொன் னான். ஆள் சேர்ப்பதற்காக அவன் வந்திருக்கிறான்."

"ஆள் சேர்க்கவா? எதற்காக? யாருக்கு?"

"உள்ளே வா. எனக்குத் தெரிந்ததையெல்லாம் உன் னிடம் சொல்லத்தான் வேண்டும்" என்று வாஸிர் அவள்

கையைப் பற்றி உள்ளே அழைத்துச் சென்றான். என்ன தெரிந்துகொள்ளப் போகிறோம் என்று வியந்தவளாக அந்தப் பேதைப்பெண் உள்ளே சென்றாள்.

*　　　*　　　*

கடையை விட்டுப் போகும்போது ஸோனி படுமோசமான மனநிலையில் இருந்தாள். வாஸிர் சொன்னதை நம்பக் கூடாது என்றுதான் அவள் விரும்பினாள். ஆயினும் அது உண்மையாகத்தான் இருக்கும் என்பதும் அவளுக்குத் தெரியும். ரஸூலா திரும்பி வந்ததால் அவள் அடைந்த மகிழ்ச்சி யாவும் மண்ணோடு மண்ணாகிவிட்டது.

பணத்துக்காகப் படுமோசமான காரியத்தைச் செய்யப் போகிறானா என்று அவள் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டாள். செயலற்றவளாக அதனை அவள் பார்த்துக் கொண்டு இருக்கப்போகிறாளா? அல்லது அவ்வாறு நடக்கவிடாமல் தடுக்க ஏதாவது செய்யப்போகிறாளா?

ஹர்ஜத்பால் என்ற கிராமத்தில் உள்ள மசூதியில் நடைபெற்ற பிரார்த்தனைக் கூட்டத்தை அவள் நினைவு படுத்திக் கொண்டாள். ஒரு வெள்ளிக்கிழமை சில பெண்களுடன் அவள் அங்கு சென்றிருந்தாள். அந்தக் கூட்டத்தில் மக்கள் காஷ்மீரத்துக்கு விசுவாசமாக நடந்துகொள்ள வேண்டுமென்றும் போரிடத் தயாராக இருக்கவேண்டு மென்றும் தலைவர் ஷேக் அப்துல்லா கேட்டுக்கொண்டார். ரஸூலா தாய்நாட்டுக்குத் துரோகம் செய்யத் துணிந்தால் அதைத் தடுக்க, தான் ஏதாவது செய்துதானாக வேண்டும். தன் சாமர்த்தியத்தையெல்லாம் பிரயோகித்து இதில் எப்படியும் வெற்றி பெறவேண்டும்.

இரவில் ரஸூலா திரும்பி வந்தபோது நன்றாகக் குடித்திருந்தான். ஸோனி அன்பாகப் பேசி அருமையான உணவு படைத்தாள்.

முறைக்கான பதிவு விண்ணப்பம் ஹால் என்பவரால் கொடுக்கப்பட்டிருந்ததை அறிந்தார். தாங்களே இவ்வுலோகத்தைக் கண்டு பிடித்தவர் என்ற இவர்களது பிரச்சினைக்குப் பின் வருமாறு தீர்வு காணப்பட்டது. ஹாலுக்கு அமெரிக்க உரிமையும், ஹெரூல்ட்டுக்கு பிரான்சு உரிமையும் வழங்கப்பட்டன. விரோதிகளாக மாறுவதற்கு பதிலாக இருவரும் ஒத்துழைத்தனர். ஹெரூல்ட்டின் தந்தை இறந்தபோது தன்னுடைய பதனிடு நிலையத்தை மகனுக்கு விட்டுச் சென்றார். அதில் ஒரு நீராவி இயந்திரம் நிறுவப்பட்டிருந்தது. அங்கு ஒரு சிறு டைனமோவை நிறுவி அலுமினியத்தின் பல்வேறு கூட்டுப் பொருள்களை மின்பகுப்பு முறையில் பிரிப்பதற்கான பரிசோதனைகளை ஹெரூல்ட் மேற் கொண்டார். 23 வயதான இந்த இளைஞர் தனக்குத் தெரிந்த இரசாயன அறிவைக் கொண்டு ஹால் கண்டு பிடித்த அதே முறையைக் கண்டு பிடித்தார். அலுமினியம் தயாரிக்கும் தொழிலின் கதை இதுதான்.

உலகில் மிக அதிகமாகப் புதைந்துள்ள உலோகம் அலுமினியம்தான். 'ஃபெல்ட்ஸ்பார்' (feldspar), களிமண், பாக்சைட், கிரியோலைட், கோரண்டம் (corundum) ஆகிய பொருள்களில் அலுமினியம் கிடைக்கிறது. தெற்கு பிரான்சில் 'லெ போ' (les Baux) என்னுமிடத்தில்தான் முதல் முதலாக இவ்வுலோகம் பூமியிலிருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. எனவே, இவ்வுலோகத்திற்கு 'பாக்சைட்' (Bauxite) எனப் பெயர் சூட்டப்பட்டது.

அலுமினியத்தைச் சிக்கனமான முறையில் பிரித்து எடுப்பதற்கு 'பாக்சைட்'தான் முக்கியமான கனியாகும். அலுமினியம் தயாரிக்கும் பொழுது இது சுத்தமான அலுமினியம் ஆக்சைடு அல்லது அலுமினியாவாக மாற்றப்படுகிறது. இரும்புதான் இதிலுள்ள முக்கியமான

'கூலிப் பட்டாளத்துக்கு ஆள் சேர்க்கத் தான் ரஸுலா வந்தான் என்பது தெரியுமா?' என்று மக்கள் பேசிக் கொண்டார்கள்.

ஒவ்வொருவரும் இதனைப் பற்றியே பேசினார்கள். படையெடுப்பாளர்கள் முன்னேறி வந்தால் இந்தக் கிராமமும் தாக்கப்பட்டு தீக்கிரையாகும். உடைமைகள் சூறையாடப் படும். பெண்கள் மானபங்கம் செய்யப் படுவார்கள். மக்களைப் பீதி கவ்வியது. அங்கிருந்து ஓடிப் போய் விடுவது பற்றிப் பேசிக் கொண்டார்கள். ஒவ்வொருவருடைய முகத்திலும் கவலையும் பீதியும் கப்பியிருந்தது.

ஆனால் அந்தக் கிராமத்தில் ஒரேஒரு நபருடைய முகத்தில் மட்டும் விசித்திரமான புன்னகை காணப்பட்டது. அவள் தான் ஸோனி.

நிலவொளியில் படகில் அழைத்துச் சென்றபோது ரஸுலாவுக்கு அவள் விஷமிட்ட தின்பண்டங்களைக் கொடுத்து ஜீலம் நதியில் தள்ளிவிட்டாள்.

நள்ளிரவில் தன் குடிசைக்குத் திரும்பிய அவள் பெட்டியைத் திறந்து அதிலிருந்த ரூபாய் நோட்டுகளை எல்லாம் அடுப்பில் போட்டாள்.

திங்கட்கிழமை காலையில் இருபத்திரண்டுபேர் அவள் வீட்டுக்கு வந்தனர். தன்னுடன் வந்தால் ஒவ்வொருவருக்கும் ஐம்பது ரூபாய் தருவதாக ரஸுலா சொன்னதாகத் தெரிவித்து ரஸுலா எங்கே? என்று கேட்டனர்.

தனக்கு எதுவுமே தெரியாது என்று சாதித்த ஸோனி, "மீண்டும் என்னிடம் சொல்லாமல் ஓடிப்போய் விட்டானே" என்று கூறிப் புலம்பினாள்.

ரஸுலாவைத் தேடி வந்தவர்கள் அவனைத் திட்டிக் கொண்டே போய்விட்டார்கள். முஸாபராபாத்திலிருந்து வந்த பஸ் காலியாகத் திரும்பிப் போயிற்று.

தன்னுடைய தாய் நாட்டுக்காக நல்லதொரு காரியத்தை ஸோனி அமைதியாகச் செய்துவிட்டாள்.

இன்று அவள் ஒரு விதவை— கஷ்டப்பட வேண்டியவள்; கைகொடுக்க யாரும் இல்லாதவள். அதனால் என்ன? துரோகம் புரிவதிலிருந்து தன் கணவனைத் தடுத்து விட்டோம் என்ற திருப்தி அவளுக்கு உறுதியாக ஏற்பட்டிருந்தது.

எனவே கிராமமே பீதியிலாழ்ந்து போய் ஆண்களும் பெண்களும் வீதியில் நின்று கொண்டு முஸாபராபாத் எதிரிகளிடம் சிக்கி விட்டதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது எளிய விவசாயப் பெண்ணான ஸோனி தன் வீட்டில் அடுப்படியில் எரியும் தீ ஜுவாலையைப் பார்த்த படியே உட்கார்ந்திருந்தாள்.

ஒரு துரோகியைக் கொன்று விட்டோம். இருபத்திரண்டு பேர்களை எதிரிப் படையில் சேராமல் தடுத்து விட்டோம். காஷ்மீரத்தின் சுதந்திரத்தைப் பாதுகாக்க அடக்கமான பணி ஒன்றைச் செய்து விட்டோம் என்ற எண்ணத்தினால் அவள் மனதில் உவகை நிறைந்திருந்தது.

# தேசமும் பாசமும்

தக்காணத்திலுள்ள சமஸ்தானம் ஒன்றில் நதிக்கரை யோரமாக இரண்டு புராதன கிராமங்கள் இருந்தன. அம்பே வாடி, போர்வாடி என்பது அவற்றின் பெயர். ஏதோ அர்த்தமில்லாத பெயராகத் தோன்றுகிறதல்லவா? உம். பெயரில் என்ன இருக்கிறது?

நல்ல பெயராக மாற்றி அழைக்க வேண்டுமென்று சொன்னால் அந்தக் கிராம மக்கள் சம்மதிக்கவே மாட்டார் கள். விடாப்பிடியாக இந்தப் பெயரை வைத்துக் கொண் டிருப்பதிலே அவர்களுக்கு விசேஷப் பெருமை. இதுபோலத் தான் ஒவ்வொன்றிலும். தாங்கள் பிறந்த இடம், பரம் பரையாகப் பயிரிட்டு வரும் நிலம், வயலுக்கு நீர் வழங்கும் சிற்றாறு வேணி, ஆகிய எல்லாவற்றைக் குறித்தும் அவர் களுக்குப் பிடிபடாத பெருமை. அது மட்டுமா? அவர் களுக்கிடையேயுள்ள பூசல்களைக் குறித்தும் பெருமையடை யும் விசேஷப் பிரகிருதிகள் அவர்கள்!

இரு கிராமத்து மக்களிடையேயும் ஏச்சும் பேச்சும் பூச லும் கை கலப்பும் பல ஆண்டுக்காலமாக அவர்களுடைய

வாழ்க்கையின் ஓர் அம்சமாகவே ஆகிவிட்டது. இரு கிராமத்திலும் உள்ள ஆண்களும் பெண்களும் வழிவழியாகப் போட்டி, பொறுமை, சண்டை போன்ற பண்புகளிலேயே ஊறி வளர்ந்து வந்திருப்பவர்கள்.

நல்ல விஷயமாகட்டும், கெட்ட விஷயமாகட்டும் எதுவாக இருந்தாலும் ஒருவர் மற்றவரை மிஞ்சவேண்டும் என்பதிலேயே அவர்கள் கருத்துள்ளவர்கள். அம்பேவாடியிலும் போர்வாடியிலும் உள்ள இளைஞர்களுக்கிடையே கைகலப்பேற்படுவது சகஜமான நிகழ்ச்சியாகும். இதற்குப் பெரிய காரணம் எதுவும் தேவையேயில்லை. சிறு சண்டையாவது ஏற்படாமல் சில தினங்கள் கழிந்துவிட்டால் 'இந்த இளைஞர்களுக்கு என்ன கேடு வந்துவிட்டது' என்று மக்கள் வியப்படைவார்கள்.

நியாய அநியாயம் குறித்து இரு கிராம மக்களும் விநோதமான கருத்துக் கொண்டவர்கள். இவர்கள் எப்பொழுதும் சண்டையிட்டுக் கொண்டிருந்த போதிலும் வருடத்தில் இரண்டு நாட்கள் மட்டும் சண்டை நிறுத்தப்படும். தலைமுறை தலைமுறையாக பரஸ்பர கட்டுப்பாட்டின் பேரில் கடைப்பிடிக்கப்பட்டு வரும் ஏற்பாடு இது. அந்த இரு நாட்களிலும் நட்புறவுடன் அவர்கள் விழாக் கொண்டாடுவார்கள்.

ஒன்று தசரா பண்டிகை நாள். மற்றொன்று சிராவண மாதத்தின் கடைசி திங்கட்கிழமை. அன்று ஐந்து மைல்களுக்கப்பாலுள்ள குன்றின்மீதுள்ள சிவாலயத்தில் பெரிய திருவிழா நடைபெறும். முன்னொரு காலத்தில் இந்த இரு கிராமத்திலும் கடுமையான தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டதாம். அப்போது இரண்டு பேர் தவம் செய்தனராம். அவர்கள் தவத்தினால் மகிழ்ச்சியடைந்த சிவபிரான் இருவரையும் ஆசிர்வதித்து வேணிநதி பிரவாகமெடுத்து ஓடச் செய்தாராம். இந்த நிகழ்ச்சி சிராவண மாதம் கடைசித் திங்கட்

கிழமையன்று நடைபெற்றதாக நம்பப்படுகிறது. இதனைக் கொண்டாடுவதற்காகப் பல ஆண்டுகளாகப் பெரிய திருவிழா நடத்தப்பட்டு வருகிறது. அம்பேவாடி, போர்வாடி கிராம மக்கள் மட்டுமின்றி சுற்றிலுமுள்ள பல கிராமங்களிலிருந்தும் மக்கள் திரண்டு வந்து சிவனை வழிபடுவார்கள். வற்ருமல் தங்கள் வாழ்வில் வளம் பெருகவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்வார்கள்.

1941ம் வருடம் இத்திருவிழா மிகப் பெரிய அளவில் நடைபெற்றது. இப்போது காலமும் சற்று மாறியிருந்தது. மக்களுக்கு ஓரளவு சுதந்திரமும் வழங்கப்பட்டிருந்தது; அவர்களுக்கு அரசியல் உணர்வும் ஏற்பட்டு இருந்தது. எனவே சமஸ்தான மந்திரிகள் இத்திருவிழாவைச் சமூகப் பொருளாதாரத் துறைகளில் உபயோகமான நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்தத் தீர்மானித்தனர். திருவிழாவை யொட்டி விவசாயக் கண்காட்சி, கால்நடைக் கண்காட்சி, சொற்பொழிவுகள் போன்றவற்றுக்கும் ஏற்பாடு செய்தனர்.

விழா மிகப் பெரிய அளவில் நடைபெற்றதின் காரணமாக சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்து ஆயிரக்கணக்கான பேர் வந்து கூடினர். சாரை சாரையாக மிட்டாய்க் கடைகளும், கேளிக்கை கொட்டகைகளும் காணப்பட்டன. ஆங்காங்கே கூடாரமடித்து மந்திர வித்தைக்காரர்கள் தங்கள் ஜாலத்தைக் காட்டிக்கொண்டிருந்தனர். எல்லோருடைய கவனத்தையும் அதிகமாகக் கவர்ந்தது 'ராட்சஸ ராட்டினம்' தான். துணிச்சல்காரரான ஒருவர் பம்பாயிலிருந்து அதைக் கொண்டுவந்து பொருத்தியிருந்தார். கிராம மக்கள் சாதாரண மரத்தினுலான குடை ராட்டினத்தைப் பார்த்திருக்கிருர்கள். ஆனுல் நீராவி யந்திரத்தினுல் இயங்கிய நாற்பதடி உயரமுள்ள பிரமாண்டமான ராட்டினம் அவர்களுக்கு அதிசயப் பொருளாக இருந்தது. எனவே அது

பொருத்தப்பட்டிருந்தஇடத்தில் ஏராளமானபேர் கூடியிருந் தனர். ராட்டினத்தில் ஏறிச் சுற்றுவதற்குத் தங்கள் முறையை எதிர்பார்த்தவர்களாக நீண்ட ‘க்யூ’ வரிசையில் மக்கள் நின்றுகொண்டிருந்தனர். அழகிய ராட்டினத்தில் ஏறி ஆகாயத்தில் மேலே செல்லும் மயிர்க்கூச்செறியும் அனுபவத்தைப் பெற விரும்பியவர்கள் ஒருபுறமிருக்க, அந்த வேடிக்கையை அனுபவிப்பதற்காகவும் ஏராளமான பேர் கூடியிருந்தனர். ராட்டினம் எழுப்பிய விநோதமான ஒலியை ரசித்துக்கொண்டு சிலர் இருப்பார்கள். ராட்டினம் சுழலத் தொடங்குவதையும் சுற்றிவிட்டு நிற்பதையும் ரசிப் பவர் சிலர். ராட்டினம் சுழன்று மேலே போகும்போது அதில் உட்கார்ந்து கொண்டிருப்பவர்களைப் பார்த்து சீட்டி யடிப்பார்கள் சிலர்.

போர்வாடி கிராமாதிகாரியின் இளம் பெண் சோனி ராட்டினத்தில் ஏறியபோது வேடிக்கை பார்க்கும் கும்ப லிடையே பெரும் பரபரப்பேற்பட்டது.

“அதோ பார் சோனி! பாபு படீல் மகள்.”

“இவ்வளவு பெரியவளாக வளர்ந்து விட்டாளே!”

“இன்னும் அவளுக்கு மணம் செய்து வைக்காமல் இருப்பது ஆச்சரியம்தான்.”

“திருவிழாவுக்குத் தனியாக வந்திருக்கிறாளா என்ன?”

“உனக்கென்ன கண் அவிந்து விட்டதா? அவளுடன் மூன்று பெண்கள் வந்திருக்கிறார்களே! தெரியவில்லையா?”

“பெண்களைச் சொல்கிறாயா? கூட ஆண்பிள்ளை எவ னும் வரவில்லை போலிருக்கிறதே என்றுதான் சொன்னேன்”

இதுபோன்ற பேச்சுக்கள் அடிபட்டன.

அப்போது ‘கிர்’ரென்று பெரிய சத்தம் கேட்கத் தொடங்கியது. ராட்டினச் சக்கரங்கள் சுழன்றன. அது மேலுங்கீழுமாகச் சுற்றும்போது கூட்டத்தினர் சீட்டியடித் துக் கூச்சலிட்டனர். கூட்டத்தின் ஓரமாக நின்றுகொண்

டிருந்த ஓர் இளைஞன் நாடோடிப் பாடலொன்றைப் பாடத் தொடங்கினான். கிராமபோன் பிளேட் ஒன்றைக் கேட்டுக் கற்றுக்கொண்ட பாடல் அது.

பாட்டு தன்னைக் குறித்துத்தான் பாடப்பட்டது என்பது சோனிக்குப் புரிந்தது. எனவே சக்கரம் கீழிறங்கி வந்தபோது அவனை அவள் சுட்டெரித்து விடுவது போல் பார்த்தாள். இதனால் நிலைகுலைந்துபோன அவன் பாடுவதை நிறுத்தினான். சக்கரம் மேலே சென்றபோது மீண்டும் ஒரு முறை அவனைப் பார்த்தாள். 'நான் பாபு படேலின் அருமை மகள் என்பது நினைவிருக்கட்டும். ஆபாசமான பாட்டை நிறுத்தினாயோ பிழைத்தாய். இல்லாவிட்டால் உனக்கு ஒரு பாடம் கற்பித்திருப்பேன். என்னுடைய தந்தை போர் வாடியின் முடிசூடா மன்னர். அவரைக் கண்டாலே எல்லோருக்கும் பயம்—அம்பேவாடி மக்களுக்கும் கூட'' என்று எச்சரிக்கை செய்வது போலிருந்தது அந்தப் பார்வை.

சக்கரம் நின்றதும் ஒவ்வொருவராக இறங்கினார்கள். தன்னுடைய முறை வந்தபோது சோனியும் இறங்கினாள். உடன் வந்த மூன்று தோழிகளுடன் நடந்து சென்றாள். அவர்கள் ஐம்பதடி தூரம் சென்றிருப்பார்கள். பின்னால் யாரோ சீட்டியடிக்கும் சத்தம் கேட்டது. தோழிகளில் ஒருத்தி சோனியின் தோள்களைத் தொட்டு "அந்த ஆள் நம்மைத் தொடர்ந்து வருகிறான் என்று நினைக்கிறேன்" என்றாள்.

"வந்தால் வரட்டுமே! அவன் என்ன செய்துவிட முடியும்? எதற்காகப் பயப்படுகிறாய்?'' என்றாள் சோனி.

பல தலைமுறைகளாக நடைமுறையில் இருந்துவரும் கட்டுப்பாடு அது. சிராவண மாதத்தில் நடைபெறும் விழாவின்போது இரு கிராம மக்களும் எவ்வித சச்சரவிலும் ஈடுபடக்கூடாது; யாரையும் துன்புறுத்தக்கூடாது என்பது சோனிக்குத் தெரியும். பின்னால் சீட்டியடித்துக்

கொண்டு வருபவன் அம்பேவாடியைச் சேர்ந்தவனுக இருந் தால் கூடத் தங்களுக்கு எதுவும் தீங்கிழைக்க மாட்டான் என்பதை அவள் அறிந்திருந்தாள். அப்படியில்லாமல் வேறு ஏதாவது கிராமத்திலிருந்து வந்தவனுக இருந்தாலும் அவனுல் என்ன செய்துவிட முடியும் என்று சோனி எண் ணினுள். அவளுடைய தோழிகள் கிராமத்துப் பெண்கள் தான். ஆயினும் தங்கள் மானத்தைக் காத்துக் கொள்ள அவர்களுக்கு வழிதெரியும். சோனி இதையறிந்தவள் மட்டுமல்ல, படித்த பெண்களுக்குரிய தன்னம்பிக்கை யும் அவளிடம் இருந்தது. நகரத்திலுள்ள ஆங்கிலப் பள்ளி யொன்றில் ஐந்து வருட காலமாகப் படித்துக்கொண்டிருப் பவள் அவள்.

அவள் அணிந்திருந்த விலையுயர்ந்த ஆடைகளும் அணி களும் ஒரு கிராமாதிகாரியின் மகள் என்ற தகுதிக்கு உரி யனவாக இருந்தன. அவற்றை அவள் அணிந்திருந்தமுறை யும், தலையைச் சிங்காரித்துக் கொண்டிருந்ததும் நகரப் பெண்கள் பாணியில் இருந்தன. தோழிகள் அவளுடன் வந்ததில் பெருமையடைந்தவர்களாகக் காணப்பட்டனர். சீட்டி அடிக்கும் சத்தத்தைக் கேட்டதும் சற்றுப் பயந்த போதிலும் உறுதியுடனும் தைரியமாகவும் நடந்தனர். நாங் கள் யாருடன் செல்கிறேம் தெரியுமா என்று கேட்பது போல் இருந்தது அவர்கள் பார்வை.

சோனியின் வயதுள்ள ஒரு கிராமத்துப் பெண் நகரி லுள்ள ஆங்கிலப்பள்ளியில் படிக்கிறுள் என்று சொன்னுல் அது அசாதாரணமான ஒரு விஷயம்தான். பாபு படீல் தம் மகளை நகரத்துக்குப் படிக்க அனுப்பிய உண்மையான காரணத்தை அறிந்தவர்கள் ஒரு சிலரேயாவார். தம் மகள் நிறையப் படிக்க வேண்டும் என்பதில் பாபு படீலுக்கு அக் கறையிருந்திருக்கும் என்று கருதுவது தவறுனதாகும். ஆங் கிலப்பள்ளிக்குச் சென்று படிக்க வேண்டுமென்று சோனி

அடம் பிடித்தாள் என்றும் சொல்லமுடியாது. அம்பே வாடிக்கும் போர்வாடிக்கும் இடையேயுள்ள பழைய போட்டி தான் பாபு படீல் தம் மகளை நகரத்துக்குப் படிக்க அனுப்பியதற்குக் காரணம். பாபு போர்வாடியின் கிராமாதிகாரியாக இருந்தார். அதே போல் யேசு ஜக்தேல் அம்பேவாடியின் தலைவராக இருந்தார். பாபுவைப் போல் அவர் ஒரு சர்க்கார் அதிகாரி அல்ல என்பது உண்மைதான். ஆனால் அவருக்கு ஏராளமான நிலபுலன்கள் இருந்தன. ஜக்தேல் குடும்பத்தினர் தலைமுறை தலைமுறையாக அறிவாளிகளாகவும் திறமைசாலிகளாகவும் இருந்து வந்துள்ளனர். அதன் காரணமாக அம்பேவாடி கிராமத்தின் பெரியதனக்காரர்களாக அந்தக் குடும்பத்தினரே இருந்து வருகிறார்கள்.

பாபு படீலுக்கும் யேசு ஜக்தேலுக்கும் கடுமையான பகை. இதன் காரணமாக எழும் போட்டி சில சமயங்களில் கேலிக்குரியதாகக் கூட இருக்கும். பாபுவிடம் எவ்வளவு மாடுகள் உள்ளனவோ அவ்வளவு தம் வீட்டிலும் இருக்கவேண்டும் என்றெண்ணினார் யேசு. ரப்பர் டயர் போட்ட 'டாங்கா' வண்டியொன்றை யேசு வாங்கினார். ஒரே வாரத்துக்குள் அதுபோன்ற ஒன்றை பாபுவும் வாங்கிவிட்டார். பாபு வீட்டில் வரும் அதிகாரிகளுக்கு என்ன பிஸ்கட்டும் தேயிலையும் தரப்படுகிறதோ அதையே தம் வீட்டுக்கு வரும் விருந்தினருக்கும் யேசு தருவார்.

யேசுவுக்கு ஒரு மகன் இருந்தான். பாபு மூன்று மனைவியரை மணந்து கொண்டார். ஆயினும் அவருக்கு மகன் பிறக்கவில்லை. அவருக்குப் பிறந்தது சோனி ஒன்றுதான். இந்த அம்சத்தில் பாபு தம்முடைய தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. இந்தக்குறையை ஈடு செய்ய நூற்றுக்கணக்கான வழிகளில் அவர் முயன்று வந்தார்.

யேசுவின் மகன் ஸ்ரீரங்கன் மெட்ரிகுலேஷன் தேறிவிட்டு பம்பாயிலுள்ள ஒரு காலேஜூக்குப் படிக்கச் சென்

ருண். இதற்கு போட்டியாக பாபுவும் தம் மகள் சோனியை நகரிலுள்ள ஆங்கிலப்பள்ளிக்கு அனுப்பினார். தந்தை யுடைய ரகசிய விருப்பம் சோனிக்குக்கூடத் தெரியாது. தான் நிறையப் படிக்க வேண்டுமென்று தந்தை விரும்பு கிறார் என்றே அவள் எண்ணிக்கொண்டு இருந்தாள். இயல் பாகவே அவளுக்குப் படிப்பதில் பிரியம் இருந்தது. எனவே ஆர்வத்துடன் படித்தாள். வருடத்தில் இரண்டு தடவை நீண்ட விடுமுறை வரும். மற்ற நாட்களில் அவள் நகரத்திலுள்ள ஹாஸ்டலில் தங்கினாள். 'இந்த வருஷம் திருவிழா பெரிய அளவில் நடக்கப் போகிறது, எனவே சில தினங்களுக்கு வந்து போகவேண்டும்' என்று தந்தை கடி தம் எழுதியிராவிட்டால் இப்போது அவள் வந்திருக்கமாட் டாள். கடந்த ஐந்து வருடங்களாக அவள் விழாவில் கலந்து கொள்ளவில்லை. எனவே இந்த வருடம் சேர்த்து அனுபவித்துவிட விரும்பி வந்தாள்.

கேளிக்கைக் கொட்டகைகள் ஒவ்வொன்றின் முன்பும் அவள் நின்று பார்த்துக்கொண்டு வருவாள். "பார்த்தது போதும் சீக்கிரம் வீடு போய்ச் சேருவோம்" என்று அவளு டைய தோழிகள் முணு முணுத்தார்கள். ஆனால் சோனி வீட்டுக்குப் போக விரும்பவில்லை. தோழிகளை இழுத்துக் கொண்டு ஒவ்வொரு இடமாகப் போய்ப்பார்த்தாள். எல் லாவற்றையும் பார்த்து முடித்ததும் அவர்கள் குன்றின் மேலிருந்து கீழே இறங்கத் தொடங்கினர்.

இதற்குள் சூரியன் மலைவாயில் விழுந்துவிட்டான். தோழிகளுக்கெல்லாம் கல்யாணமாகி விட்டது. எனவே அவர்கள் உள்ளூர மாமியாருக்குப்பயந்துகொண்டிருந்தனர். அவர்கள் மிக வேகமாக நடந்தார்கள். சாலை வழியே போவதைவிடக் குறுக்கு வழியாகப் போனால் சீக்கிரம் வீடுபோய் சேர்ந்து விடலாம் என்றனர்.

சோனிக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை. ஆயினும் அதற்குச் சம்மதிக்க வேண்டியதாயிற்று. இருட்டி விட்ட இந்த நேரத்தில் குறுக்கு வழியாகப் போவது அவ்வளவு பத்திரமானதல்ல என்று சோனி சற்றுப் பயந்தாள். ஆனால் அதை வெளிக்குக் காட்டாமல் தனக்குள்ளேயே அடக்கிக் கொண்டாள். ஆற்றோரம் இருந்த அடர்ந்த புதரருகில் வந்தபோது பின்னலிருந்து சீட்டியடிக்கும் சத்தம் கேட்டது. சீட்டியடிப்பது யார் என்பது அவர்களுக்குத் தெரியுமாதலால் திகைத்துப் போனார்கள். ஒருவர் கையை ஒருவர் பற்றிக்கொண்டார்கள். தொடர்ந்து வந்தவன் நெருங்கி வந்து அந்த ஆபாசப்பாட்டைப் பாடினான்.

தங்களை எதிர்நோக்கும் அபாயம் எத்தகையது என்பதை சோனியும் அவளுடைய தோழிகளும் உணர்ந்து கொண்டார்கள். எப்படி சமாளிப்பது என்பது குறித்து ஒவ்வொருவரும் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

பாட்டு நின்றது. அடுத்த கணம் இருளிலிருந்து ஓர் உருவம் தங்களை நோக்கி வருவதைக் கண்டார்கள்.

சோனி உரத்த குரலில் "யார் நீ" என்று அதட்டிக் கேட்டாள்.

அவன் சிரித்தான்.

"நெருங்கினயோ செருப்பால் அடிப்போம்" என்று சோனி கத்தினாள்.

அந்தப்போக்கிரி மீண்டும் சிரித்தான்.

தோழிகள் ஓவென்றலறினர். சோனியும் தைரியமிழந்தவளாக "ஆபத்து காப்பாற்றுங்கள்" என்று கத்தினாள்.

அவன் மீண்டும் சிரித்தவாறே நெருங்கி வந்தான். அடுத்த கணம் அவன் சோனியின் கையைப் பற்றியிருப்பான். ஆனால் எங்கிருந்தோ ஒருவர் ஓடிவந்து நீண்ட பிரம்பினால் அவன் முதுகில் ஓங்கி அடித்தார். பலமான அடி. அவனுக்குப் பொறி கலங்கியிருக்க வேண்டும். தன்னை

அடித்தவனைத் தாக்குவதற்காக அவன் திரும்பினான். அடி மேலடி விழவே, அடிப்பவன் தன்னைவிட வலுவுள்ளவன் என்பதையுணர்ந்து கொண்ட அவன் வசைமாரி பொழிந்து கொண்டே ஓடிவிட்டான்.

விழாவை நடத்தும் பொறுப்பை மேற்கொண்ட கமிட்டியில் பாபுவும் இருந்தார். இரண்டு நாட்களுக்குப்பின்னர் விழா முடிந்ததும்தான் அவர் வீட்டுக்கு வந்தார். சோனிக்கும் அவளுடைய தோழிகளுக்கும் எதிர்ப்பட்ட ஆபத்தையும் இளைஞன் ஒருவனால் அவர்கள் காப்பாற்றப் பட்டதையும் கிராமத்தினர் யாரும் அறியமாட்டார்கள்; பாபு படேலுக்குக்கூட தெரியாது. சாதாரணமாக இருந்திருந்தால் சம்பவம் பற்றி சோனி தந்தையிடம் கூறிச் சிரித்திருப்பாள். ஆனால் நடந்த சம்பவம் விளையாட்டாகப் பேசக்கூடிய ஒன்றல்ல என்றெண்ணியதால் அவள் தந்தையிடம் தெரிவிக்கவில்லை. தன் வாழ்வில் பெரிய விளைவொன்றை ஏற்படுத்தப் போகும் அனுபவம் இந்தச் சம்பவம் என்று அவள் உள்ளூரப் பயந்தாள்.

தன்னையும் தன் தோழிகளையும் தக்க சமயத்தில் வந்து பாதுகாத்த இளைஞன் யேசு ஐக்தேலுடைய மகன் ஸ்ரீரங்கன் என்பதையறிந்த சோனி மிகவும் வியப்படைந்தாள். அவனைப் பற்றி அவள் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறாள். ஆனால் அவனைப் பார்த்ததே இல்லை. அந்தப் போக்கிரியை அடித்து விட்டு மங்கிய ஒளியில் தன்னெதிரே நின்றுகொண்டிருந்த அவனுடைய கவர்ச்சியான தோற்றத்திலும், ஆறுதல் கூறும் அன்பு மொழியிலும் தன் மனதையே பறிகொடுத்து விட்டதைப் போல் அவள் உணர்ந்தாள். தன்னைக் காப்பாற்றியவன் ஸ்ரீரங்கன் என்பது தந்தைக்குத் தெரியவந்தால் அதற்காக அவர் நன்றி தெரிவிக்கமாட்டார்; மாறாக ஆத்திரமடைந்து புதிய சண்டைக்கு அடிகோலுவார் என்று சோனி பயந்தாள்.

அதனால் அந்த சம்பவம் குறித்து தந்தையிடம் தெரிவிப்ப தில்லை என்று தீர்மானித்துக் கொண்டதுடன் தன் தோழி களுக்கும் அது குறித்து மூச்சுவிட வேண்டாமென்று எச் சரிக்கை செய்து விட்டாள்.

வீடுவரை பத்திரமாகக் கொண்டுவந்து விட்டுப்போன ஸ்ரீரங்கன் அவளிடம் ரகசியமாக 'நாளை என்னைச் சந்திக்க வேண்டும்' என்று சொல்லியிருந்தான். அதனால் மறுநாள் அஸ்தமித்ததும் ஆற்றோரமிருந்த அந்தப் புதரருகில் சென் றாள். 'இன்னும் ஒருவாரம் இங்கு இருந்து விட்டுப்போ' என்று தாயார் வற்புறுத்திய போது மகிழ்ச்சியுடன் அதற்கு ஒப்புக்கொண்டாள். ஒவ்வொரு நாள் மாலையிலும் தன் காதலனைப் புதரருகில் சந்தித்துப் பேசினாள். நகரத்துக்குத் திரும்பிச் சென்றபோது அவள் முற்றிலும் மாறியவளாக இருந்தாள். திடீரென்று காதல் அவள் உள்ளத்தில் கிளைத் தது. இதெல்லாம் எப்படி முடியப்போகிறதோ என்று அவள் வியந்தாள்.

"என்ன நேர்ந்தாலும் சரி. உன்னையே நான் மணப் பேன்" என்று கடைசியாகச் சந்தித்த அன்று ஸ்ரீரங்கன் அவளிடம் சொல்லியிருந்தான். இவ்வார்த்தைகள் அவள் உள்ளத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. இனம் புரியாத ஒரு பயத்தையும் அது ஏற்படுத்தியது. ஸ்ரீரங்கனைத் தவிர வேறு எதைப்பற்றியும் அவளால் எண்ணிப் பார்க்க வும் முடியவில்லை. புதர் மறைவில் அவனுடைய அணைப்பில் சற்று நேரம் பெற்ற சுகத்தை அவளால் மறக்கவே முடிய வில்லை.

அடுத்து அறுவடை விழா வந்தது. விவசாயிகள் இதனைப் பத்து நாட்கள் கொண்டாடுவார்கள். பயிர் விளைந்து வாழ்வு சிறக்கச் செய்ததற்கு நன்றி தெரிவிக்கும் முறையில் லக்ஷ்மிக்கு விசேஷ பூஜைகள் நடத்துவார்கள்.

கிராமத்துக்கு வந்திருந்த ஸ்ரீரங்கன் பம்பாய் செல்லத் துடிதுடிக்கவில்லை. இப்போது அவன் தொழிலாளர் இயக்கத்துடன் தொடர்பு கொண்டிருந்தான். அவர்களுடைய நலனுக்காக உண்மையாகப் பாடுபடும் தலைவன் என்ற பெயரை இதற்குள் அவன் பெற்றிருந்தான். எப்போது ஆபத்தில் சிக்கிக்கொள்ளப் போகிறானோ என்று அவன் தந்தை பயந்து கொண்டிருந்தார். எனவே பம்பாய்க்குத் திரும்பிப் போக அவன் அவசரப்படாதது குறித்து அவர் உள்ளூர மகிழ்ச்சி யடைந்தார். அவன் அதிக நாள் கிராமத்தில் தங்கியிருப்பதன் உண்மையான காரணத்தை அவர் அறிய மாட்டார்.

என்றாவது ஒருநாள் தந்தையிடம் உண்மையைச் சொல்லிவிட வேண்டும் என்று ஸ்ரீரங்கன் எண்ணினான். அதற்காக உரிய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான். அறுவடை விழா ஆரம்பமானதும் விழா முடிவதற்குள் தந்தையிடம் சொல்லிவிட வேண்டும் என்று முடிவுசெய்து கொண்டான்.

விழாவின்போது சோனியும் கிராமத்துக்கு வந்திருந்தாள். இப்போது அவள் உடல் இளைத்துப்போயிருந்தது. கண்ணுக்குக் கீழே கரு வளையமிட்டிருந்தது. உடம்பைக் கவனிக்காமல் அதிகமாகப் படித்துக் கெடுத்துக் கொள்கிறாள் என்று பாபு நினைத்தார். அவருடைய உள்ளம் உருகியது. தன்னுடைய பைத்தியக்காரத்தனமான ஆசைக்காக அவளை ஹாஸ்டலில் தங்கவைத்து உடல் நலத்தைக் கெடுத்து விட்டோமோ என்று அவரால் தனக்குத்தானே கேட்டுக்கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

"உடம்பு சரியில்லையா என்ன ?" என்று அன்புடன் அவளைத் தட்டிக்கொடுத்தவாறே கேட்டார் பாபு.

சோனிக்கு என்னவோ போலிருந்தது. இவ்வளவு அன்பான தந்தையுடன் சண்டையிட்டுக்கொண்டு ஸ்ரீரங்க

னுடைய மனைவியாக ஆவதற்குப் போதுமான தைரியம் அவளுக்கு இருக்கிறதா? அந்தத் தைரியம் அவளுக்கு இல்லையென்றால் காதலற்ற வாழ்க்கையை ஏற்றுக்கொள்ள வேண்டியது தான்—இவ்வாறு எண்ணியபோது அவள் கண்களில் நீர் சுரந்தது.

தன்னுடைய அறைக்குச் சென்று தென்புறம் இருந்த ஜன்னலருகே சென்று வெளியே பார்த்துக்கொண்டு நின்றாள். போர்வாடி கிராம எல்லையில் இருந்த வயல்களை அவளால் காணமுடிந்தது. சிறிதளவே நீர் ஓடிக்கொண்டிருந்த ஆறும் அதன் மறுகரையிலுள்ள மரங்களும் தெரிந்தன. காங்கிரஸ் மூவர்ணக் கொடி பறந்து கொண்டிருந்த ஓட்டு வீடு ஒன்றின்மீது அவள் பார்வை பதிந்திருந்தது.

அந்த வீட்டைப் பார்க்கும்போது எவ்வளவு அமைதியாகவும் இன்பமாகவும் இருந்தது? ஜக்தேல் குடும்பத்தினருடைய வீடு அது—அவளுடைய அருமைக் காதலன் ஸ்ரீரங்கனுடையது. இப்போது அவனும் கூடத் தன்னைப் பற்றித்தான் எண்ணிக் கொண்டிருப்பானோ?

"அறுவடை விழாவுக்கு வரும்போது நானே உன் தந்தையிடம் வந்து உன்னை மணம் செய்து கொடுக்குமாறு கேட்பேன்" என்று சென்றமுறை விடை பெற்றுக் கொண்டு போனபோது ஸ்ரீரங்கன் அவளிடம் கூறியிருந்தான். "உன் தந்தை சம்மதித்தால் நல்லது. சம்மதிக்காவிட்டால் துணிந்து ஒரு காரியத்தைச் செய்யத் திட்டமிட்டிருக்கிறேன்" என்று சொன்னாரே. இது அவருக்கு நினைவு இருக்குமா? துணிகரமான திட்டம் என்றாரே அது என்னவாக இருக்கும்? முரட்டுத்தனமாக ஏதாவது செய்ய எண்ணியிருக்கிறாரோ? காதலித்த பெண்ணுக்காக உயிரைக் கொடுத்தவர்களும் உண்டே? ஸ்ரீரங்கன் அப்படி ஏதேனும்..."

பெருமூச்சு விட்டவாறே அவள் ஜன்னல் பக்கத்தி லிருந்து அப்பால் சென்றுள். படியிறங்கிக் கீழே போகும் போது பூஜையறைக்குச் சென்று ஸ்ரீரங்கனுக்கு ஒரு கெடு தலும் நேராமல் இருக்கும்படி வேண்டிக்கொள்ள வேண்டும்; விழா பத்துநாளும் அம்பிகைக்கு மாலை தொடுத் துப் போடவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள்.

இந்த முடிவுப்படி சோனி தினந்தோறும் மாலை தொடுத் துப் போட்டு வந்தாள். எட்டு நாட்கள் கடந்து விட்டன. ஒன்பதாவது நாள் மாலை சூட்டியபோது சோனியின் கரங் கள் நடுங்கின. அன்றுமாலை ஸ்ரீரங்கன் தன் தந்தையை வந்து காணப்போகிருன் என்பதை யறிந்திருந்ததுதான் அதற்குக் காரணம். மௌனமான அவளுடைய பிரார்த் தனை மனப்பூர்வமானதாகவும் முடிவற்றதாகவும் இருந்தது.

அவள் இரவில் படுக்கையில் படுத்தபோது கண்ணீர் பெருக்கெடுத்தது. மாலையில் தன் தந்தைக்கும் ஸ்ரீரங்கனுக் கும் நடைபெற்ற சண்டையைக் காண நேர்ந்ததுதான் அதற்குக் காரணம். ஸ்ரீரங்கன் சொன்னபடி வந்தான். அவ ளுடைய தந்தையிடம் தன் காதலை எடுத்துச் சொல்லி சோனியை மணம் செய்து கொடுக்குமாறு கேட்டான். அவ ளுடைய தந்தையோ மேற்கொண்டு அவனைப் பேசவிடா மல் தடுத்து தாறுமாருக ஏசத்தொடங்கினர். இரு குடும்பத் தாரிடையேயும் இருந்த பழைய பகை, பூசல் யாவும் கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. சாட்டையினல் அடிப்பது போல் அவர் சுடுசொற்களை வீசினர்.

“போக்கிரிக் கழுதை! போ வெளியே. இல்லாவிட்டால் உன்னைக் கொன்றுவிடுவேன்” என்று அவர் கத்தினர். ஸ்ரீரங்கன் போனதும் அவருடைய கோபம் அவள்மீது பாய்ந்தது. கடுஞ்சொற்களைப் பிரயோகித்து அவளைக் கண் டித்தார்.

இதையெல்லாம் நினைத்துப் பார்த்த சோனி எதுவும் செய்யமாட்டாதவளாகத் தேம்பினாள். இப்போது எல்லாம் முடிந்துவிட்டது என்றவள் எண்ணினாள். பிடிவாதக்கார ரான தந்தை ஸ்ரீரங்கனுக்குத் தன்னை மணம் செய்து கொடுக்க எப்போதுமே சம்மதிக்க மாட்டார். எனவே ஆயுள் முழுவதும் வேதனையை அனுபவிப்பதிலிருந்து தப்பு வதற்குள்ள ஒரேவழி தற்கொலை செய்து கொள்வதுதான். இந்த எண்ணம் அவளைப் பெரிதும் வாட்டியது. தொண்டை வறண்டது; இதயம் வலித்தது. தன்னையே எப்படியும் மணந்து கொள்வதாக ஸ்ரீரங்கன் சபதம் செய்திருக்கிறான் என்ற எண்ணம்தான் சற்று நம்பிக்கையும் ஆறுதலும் அளிப்பதாக இருந்தது. ஆயினும் அவன் முரட்டுத்தனமாக ஏதாவது செய்துவிட்டால், அதனால் ஏற்படக்கூடிய விளைவு களை எண்ணியபோது சோனிக்கு உடல் நடுங்கியது.

அவளுடைய ஆசையெல்லாம் நிராசையாகிவிடும் போலிருந்தது. இதயம் வேதனையால் விம்மியது. போதும் போதும் இந்தக் காதல் வேதனை. எவ்வளவு துன்பங்கள்— போராட்டங்கள்!

மறுநாள் தசரா கொண்டாட்டம். அம்பேவாடி, போர் வாடி மக்கள் விசித்திரமானமுறையில் அதைக் கொண்டாடு வார்கள், மாலையில் பலமான விருந்துக்குப் பின்னர் புதிய ஆடைகளை யணிந்துகொண்டு தலையில் பெரிய தலைப்பாகை யைச் சுற்றிக்கொள்வார்கள். குதிரைகள் அலங்கரித்து நிற் கும். தாரை தப்பட்டைகளுடன் ஆட்கள் தயாராக இருப் பார்கள். ஆண்கள் எல்லோரும் ஈட்டி, கத்தி, துப்பாக்கி போன்ற ஏதாவது கையில் கிடைத்த ஆயுதத்தை எடுத்துக் கொள்வார்கள். இரு கிராமத்திலிருந்தும் ஊர்வலம் புறப் பட்டு குன்றின் மீதுள்ள பவானி கோயிலருகில் சந்திப்பார் கள். அங்குள்ள 'தங்க இலை' மரத்துக்குப் பூஜை செய்தபின் முயல் வேட்டை ஆரம்பமாகும். இரு கிராமத்தினரும் ஒரு

வரை ஒருவர் மிஞ்சப் போட்டியிடுவார்கள். அடுத்தவர் வேட்டையாடியதைக் கைப்பற்றவும், தாங்கள் பிடித்ததைக் கைவிட்டுப் போகாமல் காப்பாற்றவும் கடுமையாகச் சண்டையிடுவார்கள். கடைசியாக வெற்றி பெற்றவர்கள் இருபதடி நீளமுள்ள ஈட்டியில் தாங்கள் வேட்டையாடிக் கொன்ற முயல்களைக் குத்தி எடுத்துக்கொண்டு வெற்றியைக் கொண்டாடும் முறையில் கிராமத்துக்குத் திரும்புவார்கள். தாரை தப்பட்டை முழங்க மக்கள் வெறிபிடித்தவர்களைப்போல் கூத்தாடியவாறே செல்வார்கள்.

இந்த வேட்டையில் வெற்றி தோல்வி மாறிமாறி வரும். சில சமயங்களில் அம்பேவாடி மக்கள் வெற்றி பெறுவார்கள்; வேறு சில சமயங்களில் போர்வாடி மக்கள் வெற்றி பெறுவார்கள். ஆயினும் இந்த வேட்டையில் கண்டிப்பான வழிகள் பின்பற்றப்படும். சண்டை எவ்வளவு தீவிரமாகவும் கடுமையாகவும் இருந்தபோதிலும் யாரும் தவறான வழிகளைக் கடைப்பிடிக்க மாட்டார்கள். எழுதிவைக்கப்படாத இந்த விதியை எளிய உள்ளத்தினரான அந்த இரு கிராம மக்களும் பின்பற்றி வந்தனர். எனவே தசரா பண்டிகையின்போது நடக்கும் முயல் வேட்டை ஒரு பெரிய நிகழ்ச்சியாக இருக்கும். ஒவ்வொருவரும் அந்த நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். அந்த வருடத்தில் நடந்தவற்றை அடுத்த வருடம் வரை பேசிக்கொண்டிருப்பார்கள்.

குறிப்பிட்ட இந்த தசரா பண்டிகை அன்று இரு கிராமத்திலிருந்தும் ஊர்வலம் புறப்பட்டது. ஒவ்வொருவரும் தாங்கள் வெற்றிபெற வேண்டுமென்பதில் துடியாக இருந்தார்கள். அம்பேவாடி மக்களை இந்த வருடம் முறியடிக்க வேண்டும் என்று போர்வாடி மக்களை பாபு படைல் கேட்டுக்கொண்டபோது அதில் அதிகத் தீவிரம் காணப்பட்டது.

" அம்பேவாடி மக்களைப் படுதோல்வியடையச் செய்ய வேண்டும்; அவமானத்தினுல் அவர்களைத் தலைகுனியச் செய்யவேண்டும்" என்று அவர் கத்திக்கொண்டேயிருந்தார். தன்னுடைய அருமைப் பெண் சோனிமீது கண் வைத்ததற்காக ஸ்ரீரங்கனைக் கண்டபடி தூற்றினுர். இதனுல் மட்டும் அவருடைய ஆத்திரம் அடங்கி விடவில்லை. வேட்டையில் அம்பேவாடி தோற்றுவிட்டால் யேசு ஜக்தேலை பகிரங்கமாகத் திட்டுவதற்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று அவர் உள்ளூர நம்பினுர்.

ஆனுல் அதிர்ஷ்டம் அவர் பக்கம் இருக்கவில்லை. அம்பேவாடி மக்கள் வேட்டையில் வெற்றி பெற்றனர். பாபு படீல் கொதித்துக் குமுறினுர். கோயிலிலிருந்து வீட்டுக்குத் திரும்பும்போது பொருமிக்கொண்டே மௌனமாக வந்தார். வீட்டையடைந்தபோது அவர் கேள்விப்பட்ட செய்தி கோபத்தை அதிகரித்தது. நறநறவென்று தம் பற்களைக் கடித்தார்.

ஸ்ரீரங்கன் அவர் வீட்டுக்கு வந்து சோனியை அழைத்துக்கொண்டு போய்விட்டான்!

" இருக்காது. இருக்கவே முடியாது" என்று மூச்சுத் திணறக் கத்தினுர். ஒரு கணம் அந்தச் செய்தியை அவரால் நம்பவே முடியவில்லை. ஏனெனில் வேட்டையில் ஸ்ரீரங்கன் ஈடுபட்டிருப்பதை அவரே பார்த்தார். ஆனுல் ஊர்வலம் கிளம்பியதும் ஸ்ரீரங்கன் காணப்படவில்லை என்பதும் அவருடைய நினைவுக்கு வந்தது. யாருமறியாமல் வந்து சோனியை அழைத்துக்கொண்டு போயிருக்க வேண்டும்.

பாபு படீல் கோபத்தால் குதித்தார். பயங்கரமான எண்ணங்கள் அவர் மனதில் பளிச்சிட்டன. யேசு ஜக்தேலுடைய வீட்டைத் தாக்கி தீ வைத்துக் கொளுத்தவேண்டும். ஸ்ரீரங்கனை அடித்துக் கொன்று போட்டுவிட்டு

சோனியை இழுத்துக்கொண்டு வரவேண்டும் என்று அவருக்குத் தோன்றியது.

யேசு ஜக்தேலுடைய வீட்டு முன்பு இதற்கு மாறான ஒரு காட்சி காணப்பட்டது. அம்பேவாடி மக்கள் ஆடிப் பாடியவாறே உற்சாகமாகத் தங்கள் வீடு திரும்பினர். அவர்கள் வீட்டுப் பெண்கள் வீரர்களாகத் திரும்பும் தங்கள் வீட்டுக்காரர்களை ஆரத்தி சுற்றித் திலகம் இட்டு மாலை அணிவித்து வரவேற்றனர். ஸ்ரீரங்கன் தன் வீட்டுக்குத் திரும்பியபோது தன்னை எதிர்பார்த்து தந்தை வாசற்படியில் காத்திருப்பதைக் கண்டான். சோனியை அவளுடைய வீட்டிலிருந்து அழைத்துக்கொண்டு வந்த விதம் பற்றி அவரிடம் சொன்னான்.

"நீயா இப்படி செய்தாய்?" என்றதற்கு மேல் வேறு எதுவும் அவரால் சொல்ல முடியவில்லை. அப்படி அவர் கூறியபோது அவர் வார்த்தைகளில் வியப்பும், பாராட்டும் தொனித்தது.

"தங்கத்தைக் கொள்ளையடிக்க வேண்டிய நாள் அல்லவா இன்று? பாபு படீல் வீட்டிலிருந்த இந்த செல்வத்தை அபகரித்துக் கொள்ளவேண்டும் என்ற விருப்பம் நீண்ட காலமாகவே எனக்கு இருந்துவந்தது" என்று கூறிய அவன் தன் கையில் அணைத்துக்கொண்டிருந்த சோனியை முன்புறம் நகர்ந்து நிற்கச் செய்தான்.

"இதனால் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பற்றி யோசித்தாயா?"

"யோசித்தேன். பாபு படீல் என்ன செய்யக்கூடியவர் என்பது எனக்குத் தெரியும். எதை வேண்டுமானாலும் செய்யட்டும். அவற்றை எதிர்நோக்கிச் சமாளிக்க நான் தயாராக இருக்கிறேன். நீங்கள் கவலைப்படாதீர்கள் அப்பா! சோனியை உள்ளே அழைத்துக்கொண்டுபோய்

இனி அவள்தான் இந்த வீட்டுக்கு எஜமானி என்பதைச் சொல்லுங்கள்.''

அன்றிரவு அம்பேவாடி, போர்வாடி கிராம மக்களுக்கிடையே நடைபெற்ற சண்டைதான் கிராமத்தின் வரலாற்றிலேயே மிக மோசமான சண்டையாகும். ஆனால் பாபு படீல் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. அம்பேவாடி மக்கள் அவருடைய ஆட்களை ஓடஓட விரட்டி அடித்தனர்.

இரு கிராமத்தினரிடையேயும் நீண்ட நெடுங்காலமாக இருந்துவரும் விரோதத்தை இது மேலும் அதிகரித்தது. வெளித்தோற்றத்துக்கு அமைதியாக இருப்பதுபோல் காட்சி அளித்த போதிலும் அவர்கள் உள்ளத்தில் தீ கனிந்து கொண்டிருந்தது. இரண்டு மாதங்களுக்குப்பின்னர் சோனி—ஸ்ரீரங்கன் திருமணம் ஆடம்பரமாக நடைபெற்றது. இப்போது சோனி தன் தந்தையுடைய அன்பை பறிகொடுத்து விட்டாள். பிறந்த வீடு என்று உரிமை பாராட்ட அவளால் முடியாது. ஆனால் அதை அவள் பொருட்படுத்தவில்லை. ஏனென்றால் இப்போது அவள் ஸ்ரீரங்கனுடைய அன்பு மனைவி. அவ்வீட்டாரின் தலைவி. அவளுடைய மகிழ்ச்சி வர்ணிக்க முடியாத அளவில் இருந்தது.

1942ம் வருடம் பருவகாலம் கம்பீரமாகத் தொடங்கியது. தொடர்ந்து நான்கு வாரங்களுக்கு மழை பெய்தது. வறண்டு கிடந்த வயல்கள் முடிந்த அளவு நீரை உறிஞ்சிக் கொண்டன. அதிகப்படியான நீர் ஆங்காங்கே திட்டுத் திட்டாகத் தேங்கிக் கிடந்தது. தூரத்தேயிருந்த குன்றுகளின் மீதெல்லாம் பசுமையாகக் காணப்பட்டது. தரையெங்கும் புல் முளைத்து பச்சைப் பாய் விரித்ததுபோல் காட்சி அளித்தது. வேணிநதி பெருக்கெடுத்து ஓடியது. அதன் கரைகள் உடைத்துக்கொண்டன. அந்த ஆண்டு விளைச்சல் பிர

மாதமாக இருக்கும் என்று நினைத்து இரு கிராமத்து விவசாயிகளும் பெருமகிழ்வடைந்தனர்.

ஆனால் பாபு படீலுடைய நினைவில் இதற்கு மாறான எண்ணம் நிழலாடியது. பழிவாங்குவதற்குப் பயங்கரமான திட்டங்களை அவர் உருவாக்கிக் கொண்டிருந்தார்.

" என்னுடைய மகள் ஜக்தேல் குடும்பத்தைச் சேர்ந்தவளாகிவிட்டாள். எனவே அவள் செத்துத் தொலைந்து விட்டதாகவே நான் கருதுகிறேன் " என்று அந்த விஷயத்தைத் தான் மறந்து விட்டதாக மக்களுக்குக் காட்டிக் கொள்வதற்காக அடிக்கடி சொல்வார். ஆயினும் உள்ளூர அவர் மனம் பற்றி எரிந்தது. ஸ்ரீரங்கன் சோனியை அடிமையைப் போல் கைப்பற்றிச் சென்றுவிட்டான். எனவே பழி வாங்க வேண்டும் என்ற தமது ஆத்திரத்தையடக்கிக்கொள்வது அவருக்குக் கஷ்டமாக இருந்தது. ஜக்தேலுடைய வீட்டில் சோனி மிகவும் சந்தோஷமாக இருக்கிறாள் என்று பிறர் சொன்னதை அவர் நம்ப மறுத்தார்.

" சமஸ்தானப் போலீசாரும், பிரிட்டிஷ் போலீசும் ஸ்ரீரங்கனைக் கைது செய்யச் சரியான சந்தர்ப்பத்தை எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவனை எவ்வளவு காலம் உள்ளே தள்ளுவார்களோ தெரியாது. இப்படிப்பட்ட நிலையிலுள்ள ஒரு புருஷனிடமிருந்து மனைவி என்ன சுகத்தை எதிர்பார்க்க முடியும் " என்று அவர்களைக் கேட்டார்.

தங்கள் விருப்பத்துக்கு மாறாகப் பெண்கள் மணந்து கொண்டால் பெற்றோர்கள் இப்படித்தான் பேசுவார்கள் போலிருக்கிறது. அப்படி செய்து கொள்ளும் மணம் வெற்றிகரமானதாக இருக்கமுடியாது என்று அவர்கள் தீர்மானித்து விடுகிறார்கள். தம்பதிகள் சந்தோஷமாக இருப்பதைக்காண நேர்ந்தாலும் " இது என்ன பெரிய சந்தோஷம்?" என்றி கூறிவிடுவார்கள். தம்மைப்பற்றிப் பிரமாதமாக எண்ணிக்கொண்டிருப்பது தான் இப்படி

அவர்கள் நடப்பதற்குக் காரணம். பாபு படேல் அளவுக்கு மீறிய தற்பெருமைக்காரர். யாரும் தம் வழியில் குறுக்கிடுவதையோ, தம் விருப்பத்துக்கு மாறாக நடப்பதையோ எப்போதுமே சகித்துக்கொள்ளாதவர் அவர்.

இப்போது அவருடைய மகளே விருப்பத்துக்கு மாறாக நடந்து விட்டாள். தம்முடைய பகிரங்க எதிரியின் வீட்டிற்குப்போய் விட்டாள். சோனிக்கும் ஸ்ரீரங்கனுக்கும் திருமணம் நடந்தது, முடிந்து போன விஷயம் என்பதைப் பெயரளவுக்கு ஏற்றுக்கொண்டு விட்டபோதிலும் மனதுக்குள் பழிவாங்கும் உணர்வை வளர்த்துக்கொண்டிருந்தார். அதற்குப்பயங்கரமான வழிகளைப்பற்றி அடிக்கடி யோசிப்பார். இந்த வருஷம் விளைச்சல் பிரமாதமாக இருக்கும் என்பது நிச்சயமாகத் தெரிந்ததும் பாபு படேலுக்கு முதலில் உதித்த யோசனை ஜக்தேலுடைய பயிர்களை ஏன் கொளுத்தி விடக்கூடாது என்பதுதான்.

பாபு படேலுடைய மனதில் இத்தகைய நினைவுகள் அலைமோதிக் கொண்டிருந்தபோது நாட்டில் வேறுவிதமான உணர்வு புயல் வீசிக்கொண்டிருந்தது. அது சமஸ்தானங்களிலும் பரவியது. இரண்டாவது உலகப்போர் பாமர மக்களுடைய வாழ்க்கையைத் தாங்கமுடியாத சுமையாகச் செய்துவிட்டது. வெகுதூரம் விலகியிருந்த கிராம மக்கள் கூட இந்தக் கொடுமையை அனுபவித்தார்கள். எழுத்தறிவற்றவர்களான எளிய கிராம மக்கள்கூட தங்களுடைய நண்பர்கள் யார் எதிரிகள் யார் என்பதை சரியாகப்புரிந்து கொள்ள வேண்டுமென்று உணரத் தலைப்பட்டார்கள். வெளிப்படப் புலப்படாமல் மேகக் கூட்டங்களிடையே பளிச்சிடும் மின்னலைப் போல் இனம் விளங்காத ஒரு அமைதியின்மை மக்களுடைய இதயத்தை உலுக்கிக்கொண்டிருந்தது.

'செய் அல்லது செத்துமடி' என்ற மகாத்மா காந்தியின் தாரக மந்திரத்திஞல் தூண்டப்பட்டு மக்கள் புரிந்த துணிகரமான செயல்களைப்பற்றிய செய்திகள்நாள்தோறும் வந்து கொண்டிருந்தன. கிராமம் கிராமமாகச் சென்று ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் பற்றி மக்களுக்கு எடுத்துச் சொல்லி வந்தான் ஓர் இளைஞன். சிறைச்சாலையைப்பற்றியோ தூக்கு மேடைக்குப் போவதைப்பற்றியோ அவன் அஞ்சவில்லை. போலீஸாரிடம் அகப்படாமல் அவன் புரட்சி வேலையைச் செய்து வந்தான். அவனைப்பற்றியே மக்கள் எங்கும் பேசிக்கொண்டிருந்தனர். பாஜீ கட்கே என்ற அந்த இளைஞன் நல்ல பேச்சாளி. அவன் பேசுகிருன் என்ருல் மக்கள் ஆயிரக்கணக்கில் கூடுவார்கள். உணர்ச்சி கிளர்ந்தெழுந்தவர்களாக அவன்பேசுவதைக்கேட்பார்கள். இது பற்றிய செய்திகள் பாபு படீலுக்கும் எட்டியது. ஒரு நாள் அவருக்கும் பாஜீ கட்கேயின் சொற்பொழிவைக்கேட்கும் வாய்ப்புக்கிட்டியது. பேச்சைக்கேட்டுவிட்டு வீடு திரும்பியபோது அவரது உள்ளம் உணர்ச்சி வசப்பட்டிருந்தது. "நாடே கிளர்ந்தெழுந்திருக்கும்போது எத்தகைய மோசமான விஷயங்களைப்பற்றி நான் எண்ணிக்கொண்டிருந்திருக்கிறேன்! ஒவ்வொருவரும் அற்ப சண்டைகளையும் விரோதத்தையும் மறந்துவிட்டு தேச விடுதலைக்கான இறுதி முயற்சியில் ஈடுபட்டிருக்கும் போது நான் மட்டும் ஜக்தேல் குடும்பத்தினரைப் பழிவாங்க எண்ணிக்கொண்டிருக்கிறேன்!" என்று சிந்தித்த அவர் தம் மனத்திலிருந்த தீய எண்ணங்களை உதறித் தள்ளுபவரைப்போல் காறி உமிழ்ந்தார், அன்ருேடு அவற்றுக் கெல்லாம் தலை முழுகிவிட நினைத்தார்.

சில தினங்களுக்கெல்லாம் மகாத்மா காந்தி கைது செய்யப்பட்டு விட்டார் என்ற செய்தி வந்தது. நாட்டின் நிலையையே இது மாற்றிவிட்டது. அம்பேவாடி, போர்வாடி

கிராமங்களின் போக்கும் மாறியது. சிராவண விழா நெருங்கிக்கொண்டிருந்தது. ஆனால் அதனைப் பெரிய அளவில் கொண்டாடும் எண்ணம் யாருக்கும் இருக்கவில்லை. ஏனெனில் சுற்றிலும் பெரிய பெரிய காரியங்கள் நடந்து கொண்டிருந்தன. பாஜீ கட்கேயைக் கண்டவுடன் சுட்டுக்கொல்லுமாறு சர்க்கார் உத்தரவிட்டிருந்தது. அப்படி யிருந்தும் அவர் கிராமம் கிராமமாகச் சென்று மக்களிடையே பிரசாரம் செய்து வந்தார். ஸ்ரீரங்கன் அவருக்கு வலது கரம் போல் துணையாக இருந்தான்.

ஸ்ரீரங்கனைப் போன்ற ஒருவனை மணந்து கொண்டு தம் அருமைப் பெண் சோனி எத்தகைய வாழ்வை மேற்கொண்டிருக்கிறாள் என்று பாபு படீல் நினைத்துக்கொண்டிருந்தார். ஆனால் இப்போது அந்த நினைவில் பழைய கோபமும் வருத்தமும் பழிவாங்கும் எண்ணமும் இருக்கவில்லை. அத்தீய எண்ணங்கள் இப்போது முற்றிலும் மறைந்து விட்டன. இப்போது அவருடைய உள்ளத்தில் அன்பைத்தவிர வேறு எதுவும் இல்லை. தம் மகளைச் சந்திக்க அவர் பெரிதும் விரும்பினார்—கண்குளிரப் பார்த்து விட்டாவது வரவேண்டும் என்று நினைத்தார்.

சிராவண விழா தினம் வந்தது. அன்று ஒரு செய்தி கிடைத்தது. ஸ்ரீரங்கனைக் கைது செய்ய முடியாமற் போகவே சர்க்கார் அவன் வீட்டில் ஓர் அறிக்கையை ஒட்டியிருந்தனர். மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டுப் பதினைந்து தினங்களுக்குள் சரணடையாவிட்டால் ஜக்தேவுடைய வீட்டையும், நிலங்களையும், இதர உடைமைகளையும் பறிமுதல் செய்யப்போவதாக அந்த அறிக்கை கூறியது. இதைக் கேள்விப்பட்ட பாபு படீல் அன்றிரவே யேசு ஜக்தேல் வீட்டுக்குப் புறப்பட்டார்.

பத்து மாதங்களுக்குப் பின்னர் அவர் தமது மகளைக் காணச்செல்கிறார். இப்போது அவளைக் கண்டிப்பதற்

காகப் போகவில்லை. அன்புடன் அணைத்துக்கொண்டு ஆறுதல் கூறப் போகிறார். "கவலைப்படாதீர்கள். உங்கள் உடைமைகளையெல்லாம் வேண்டுமானால் பறிமுதல் செய்து கொள்ளட்டும். என்னுடையது யாவும் என் மகளுக்குத் தான் சொந்தம். எனவே அது ஸ்ரீரங்கனுடைய உடைமை யாகும்" என்று சொல்லப்போகிறார்.

நடந்து விட்டதை மறந்து மன்னித்து விடவேண்டும். யேசுவுக்கும் சோனிக்கும் பக்கபலமாக இருக்க வேண்டும் என்ற எண்ணமே வழியெல்லாம் அவர் மனதில் நிறைந் திருந்தது. ஜக்தேல் கவலையினால் மனமுடைந்து போயிருப் பார்; சோனி கதறியழுது கொண்டிருப்பாள் என்று அவர் எதிர்பார்த்தார்.

எனவே வீட்டுக்குள் சென்றபோது அவர் கண்ட காட்சியினால் ஆச்சரிய மடைந்தார். கவலை, துக்கம், பயம் போன்ற உணர்வுகளின் அறிகுறிகூட அங்குக் காணப்பட வில்லை. தந்தை வருவதைக் கண்ட சோனிக்கு தன் கண் களையே நம்பமுடியவில்லை. "அப்பா" என்றதற்கு மேல் வேறெதுவும் அவளால் சொல்ல முடியவில்லை.

பாபு படீல் சோனியை நோக்கிக் கையை நீட்டினார். சோனி அவர்அணைப்புக்குள் வந்து அடங்கினாள். "குழந்தாய் அழாதே! துயரத்தை நீ விட்டுவிட வேண்டும்" என்றார்.

நீர் பனித்த விழிகளை உயர்த்திப் பார்த்த சோனி "துயரமா? எனக்கு என்ன துயரம் அப்பா?" என்றாள்.

"கணவனிடம் நீ சுகத்தையடைய வில்லை. இப் போது..."

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? கணவனால் எனக்கு சுகம் இல்லை என்று சொல்வதன் அர்த்தம் என்ன? நீங்கள் நினைப்பது தவறு, நான் அடையும் இன்பம் உலகமே கண்டு பெருமைப்படக் கூடிய ஒன்று."

பாபு படேல் அவளை வெறித்துப் பார்த்தார். அவள் சொன்னது சரிதான். அவளுடைய முகத்தில் அதிருப்தியோ தன் செய்கைக்காக வருந்தும் வாட்டமோ சற்றும் காணப் படவில்லை. மாறாக அசாதாரண மகிழ்ச்சியினால் முகம் பொலிவுற்று விளங்கியது. எனவே மெல்ல "இப்போது ஸ்ரீரங்கனை எப்படிப் பார்ப்பாய்?" என்று கேட்டார்.

"அவரைச் சந்திக்கவேண்டுமென்று நான் அவசரப் படவில்லை" என்று கூறிய சோனியின் குரல் உறுதியா யிருந்தது. "நான் ஸ்ரீரங்கனுடைய அருமை மனைவி என்பது உண்மைதான். ஆனால் அவர் எனக்கு மட்டும் உரியவர் அல்ல. அவர் யாருக்கு உரியவரோ அவர்களுக்குச் சுதந்திர மும் சுகவாழ்வும் பெற்றுத் தருவதற்காக என்னை விட்டுப் போயிருக்கிறார். ஸ்ரீரங்கனைப் போன்ற ஒருவருடைய மனைவியாக அமைவது எல்லோருக்கும் கிடைக்கக்கூடிய பாக்கியம் அல்ல. இந்த அனுபவம் எனக்கு இப்போது பழக்கமான ஒன்றாகி விட்டது. விரைவில் ஒரு நாள் அவரை சந்திப்பேன் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன். அப்படியே முடியாமற் போய்விட்டாலும் அவரை நினைவு படுத்திக் கொண்டு போற்றிப் பாதுகாக்கப் பொக்கிஷம் ஒன்றை எனக்குத் தந்திருக்கிறார்."

அவள் சொன்னதின் கருத்தைப் புரிந்துகொண்ட தந்தைக்கு மனம் உருகியது. கண்களில் நீர் பெருகியது. ஏதோ சொல்ல வாயெடுத்தார். சோனி குறுக்கிட்டாள்.

"என்னை மன்னித்து இப்போது பார்க்க வந்திருக்கிறீர் களே இது யார் செய்த ஜாலம்? ஸ்ரீரங்கன் அல்லவா? உங்கள் அன்பை மீண்டும் பெற்றுவிட்ட நினைவில் அடை யும் மகிழ்ச்சிக்கு இணையாக வேறு எதையேனும் கூற முடியுமா? அப்பா! நான் மிகவும் சந்தோஷமுடையவ ளாக இருக்கிறேன். ஸ்ரீரங்கனுடைய மனைவிக்கு மன

மகிழ்ச்சி இராது என்று சந்தேகப்பட உங்களால் எப்படி முடிந்தது ?''

கலகலவென்று அவள் சிரித்தாள். பின் திடீரென்று நினைத்துக் கொண்டவளாக "அம்மா சௌக்யமா?'' என்று கேட்டாள். பாபு படீல் 'ஆம்' என்று தலையையாட்டினார்.

''நாளைக்கு அம்மாவையும் அழைத்துக் கொண்டு வாருங்கள் '' என்றாள் சோனி.

பாபு சிரித்தார். "நாளைக்கு அம்மாவை அழைத்து வருகிறேன். ஏனென்றால் உன்னைப் பிறந்த வீட்டுக்கு அழைத்துப் போகவேண்டும். உன் குழந்தை நம்முடைய வீட்டில்தான் பிறக்க வேண்டும்.''

சோனியின் அதரங்கள் மலர்ந்தன. தாயாகப்போகும் இளம் பெண்ணின் முகத்தில் பொலியும் தெய்வீக ஒளி அவள் முகத்தில் காணப்பட்டது. போரினாலும் பூசலினாலும் இந்த உலகமே அழிந்தாலும் அது மறையவே மறையாது.

# கசங்கிய மலர்

---

பிரம்மாண்டமான ஒரு மிருகத்தைப் போல் வீதியில் வந்து கொண்டிருந்த ஒரு பெரிய லாரியைச் சிறுவன் ரமேஷ் பார்த்தான். வீதியோடு தன்னைக் கடந்து அப்பால் அது போயிருந்தால் அதனை அவன் பொருட்படுத்தியிருக்க மாட்டான். வீதியில் எத்தனையோ கார்களும் லாரிகளும் போவதை அவன் கண்டிருக்கிறான். அவற்றைப் பார்ப்பதில் அவனுக்கு சுவாரஸ்யம் எதுவும் இருப்பதில்லை. ஆனால் இப்போது வந்த லாரி தன் வீட்டை யடுத்திருந்த சிறு பங்களாவின் முன்பு நின்றதால்தான் அது குறித்து அவனுக்கு அக்கறை ஏற்பட்டது. தலையையுயர்த்தி நன்றாகப் பார்த்தான்.

நாற்காலிகள், மேஜைகள், அலமாரிகள் போன்ற சாமான்கள் லாரியில் இருந்தன. லாரி நின்றதும் அதன் டிரைவரும் அரைடஜன் கூலியாட்களும் கீழே இறங்கி கட்டியிருந்த கயிறுகளை அவிழ்த்து விட்டு சாமான்களை இறக்கத் தொடங்கினர். பங்களாவுக்குப் புதிய குடித்தனக்காரர்கள் யாரோ வந்து விட்டார்கள் போலும்!

இந்த எண்ணம் ரமேஷுக்கு மிகவும் மகிழ்ச்சி அளிப்பதாக இருந்தது. பங்களா ஒரு மாத காலத்துக்கும் மேலாகப் பூட்டிக் கிடந்தது. பள்ளிக்கூடத்துக்குப் போகும் போதும் திரும்பி வரும்போதும் ரமேஷ் இந்தப் பங்களாவைக் கடந்து தான் செல்லவேண்டும். அதனுடைய பூட்டப்பட்ட கதவில் தொங்கிய பெரிய பித்தளைப் பூட்டைக் காணும்போதெல்லாம் 'புதிதாக ஏன் யாருமே இன்னும் குடிவரவில்லை?' என்று வியந்ததுண்டு. அது அருமையான வீடு என்பது அவனுக்குத் தெரியும். ஏனெனில் அவ்வீட்டில் அரைடஜன் அறைகள் இருந்தன. அதனால் ஒளிந்து பிடிக்கும் விளையாட்டு விளையாடுவதற்கு மிகவும் சௌகரியமாக இருந்தது. குளியலறைக் கருகில் தட்டு முட்டுச் சாமான் போட்டு வைக்கும் சிறிய அறை ஒன்றிருந்தது. அதற்கு இரண்டு கதவுகள்; ஒளிந்து கொள்வதற்கு வசதியான இடம். முன்பு அங்கு குடியிருந்தவர்களுடைய குடும்பத்தில் அவனை யொத்த வயதுடைய சிறுவர்கள் பலர் இருந்தனர். அவர்களுடைய தந்தையின் பெயர் பரஞ்ச்பே. அவர் தம் வேலையின் நிமித்தம் பெரும் பகுதிப் பொழுதை வீட்டுக்கு வெளியிலேயே கழித்து விடுவார். குழந்தைகள் விளையாட்டைக் கண்டு கோபமடைந்து அவர் கத்துவதுண்டு. ஆயினும் வீட்டில் அம்மா, அத்தை அல்லது பாட்டி இருந்தால் அவர்களைக் கண்டு பயப்பட வேண்டியது இல்லை என்பது ரமேஷுக்கும் இதர குழந்தைகளுக்கும் இயல்பூக்கமாகத் தெரிந்திருந்தது. ஒவ்வொரு சனிக்கிழமையும் ஞாயிற்றுக்கிழமையும் ரமேஷ் தெருவிலுள்ள எல்லாக் குழந்தைகளையும் ஒன்று திரட்டிக்கொண்டு வந்து பரஞ்ச்பேயின் வீட்டில் மனமார விளையாடுவது வழக்கம். பரஞ்ச்பே வேறு ஊருக்கு மாற்றலாகிப் போய்விட்டதால் ரமேஷும் அவனுடைய தோழர்களும் பெரிதும் வருத்தமடைந்தனர். தங்களுடைய துக்கத்தையும், மகிழ்ச்சி

யையும் பெரியவர்கள் வெளிப்படப் புலப்படுத்துகிறார்களல்லவா? அந்தக் கலை இவர்களுக்குத் தெரிந்திருந்தால் ஒரு அனுதாபக் கூட்டம் நடத்தி பரஞ்ச்பே அந்த வீட்டை விட்டுப் போய்விட்டதால் தங்களுக்கு ஏற்பட்டுள்ள வருத்தத்தை வெளியிட்டிருப்பார்கள்.

சாத்திய கதவில் தொங்கிய பெரிய பூட்டைக்கண்டு மனம் சகித்துக் கொள்ள ரமேஷ் மிகவும் கஷ்டப்பட்டான். ஒவ்வொரு முறை அதனைப் பார்க்கும்போதும் 'புதிதாக ஒருவர் எப்போது குடிவருவார்' என்று தன்னைத் தானே கேட்டுக்கொள்வான். குதித்துக் கும்மாளம் போட்டு விளையாடியதால் பெற்ற இன்பத்தை இனி என்றுமே பெற முடியாது என்று நினைக்கும் அளவுக்கு அவனுடைய இளம் உள்ளம் உடைந்து விட்டது. ரமேஷுக்கு அது தாங்க முடியாத வேதனையாக இருந்தது. இழந்துவிட்ட அந்த இன்பத்தைப்பெற ஏதாவதொரு வழி இருக்கத்தான் வேண்டும் என்று அவன் எண்ணத் தொடங்கினான். அவ்வீட்டின் பூட்டிய கதவைத் திறப்பது எப்படி என்பதற்கான வழிவகைகளைச் சிந்திக்கும் அளவுக்கு அவன் அமைதியிழந்து விட்டான். அருமையான யோசனை ஒன்று அவனுக்கு உதித்தது. வேறு யாரும் குடிவராவிட்டால் அந்த பங்களாவை வாடகைக்கு எடுக்கும்படி தன் தந்தையையே ஏன் கேட்கக் கூடாது?

சுலபமான இந்தவழி தனக்கு ஏன் முன்பே புலப்படாமற் போய்விட்டது என்று அவன் வியந்தான். இரவில் தந்தையிடம் சென்றான். "அப்பா! பக்கத்து பங்களா ரொம்ப நாட்களாகக் காலியாக இருக்கிறது. அதனை நாம் வாடகைக்கு எடுத்துக் கொள்வோமே?" என்று கூறினான்.

தந்தை இதைக்கேட்டு உறுமிவிட்டுப் பேசாமல் இருந்து விட்டார். "உனக்கு என்ன பைத்தியமா பிடித்

திருக்கிறது ? அதற்கு வாடகை கொடுக்க ஐம்பது ரூபாய் நமக்கு எங்கே கிடைக்கும் ?'' என்றாள் தாய்.

ரமேஷுக்குப் பெரும் ஏமாற்றம். அவனுக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. ஐம்பது ரூபாய் கிடைப்பது பெரிய கஷ்டம் என்று அவனால் நம்ப முடியவில்லை. தன் யோசனையைத் தந்தையிடம் கூறியதும் 'சரி அப்படியே அந்த வீட்டுக்குக் குடி போகலாம்' என்று சொல்வார் என்று தான் ரமேஷ் எண்ணியிருந்தான். எதிர்பார்த்த இந்த பதில் கிடைக்காததால் அவன் வருத்தமடைந்தான். ஒரு ஆசை நிறைவேற ஐம்பது ரூபாய் தேவைப் பட்டால் அதை யடைவது கஷ்டமானது என்று நம்புவதற்கு எவ்வளவு முயன்றும் அவனால் முடியவில்லை. 'நான் அப்பாவாக இருந்து என்னுடைய குழந்தை இவ்வாறு கேட்டிருந்தால் அப்படியே செய்வோம். பங்களாவுக்குக் குடிபோவோம் என்று சொல்லியிருப்பேன்' என்று அவனால் எண்ணாமல் இருக்க முடியவில்லை. அப்பாவைப்போல் பெரியவனானதும் செய்யவேண்டிய வேலைகள் குறித்துப் பல திட்டங்களை அவன் மனதில் கொண்டிருந்தான். அவற்றுடன் இப்போது புதிய திட்டமொன்றும் சேர்ந்துகொண்டது.

அதன் பின்னர் ஒவ்வொரு நாளும் அவன் பலகணியில் நின்று கொண்டே அவ்வீட்டின் மூடிய ஜன்னல் கதவுகளைக் கவனித்த வண்ணம் 'யாருமே இந்த வீட்டுக்கு வந்து வசிக்கப் போவதில்லையா ?' என்று தனக்குத்தானே கேட்டுக் கொள்வது வழக்கம்.

அன்றும் அந்தக் கவலையில் தான் அவன் மூழ்கி இருந்தான். தேவதைக் கதைகளில் நடப்பதுபோல் திடீரென்று அவன் ஆசை அன்று நிறைவேறி விட்டது. வீட்டுக்கு முன்னால் பெரிய லாரி யொன்று வந்து நிற்கிறது. யாரோ குடிவரப்போகிறார்கள் என்பது தெளிவாகி விட்டது.

உரத்த குரலில் பேசிக்கொண்டே கூலியாட்கள் அவசர அவசரமாக லாரியிலிருந்து சாமான்களை இறக்குவதை அவன் கவனித்தான். எல்லா சாமான்களையும் இறக்கியதும் லாரி போய்விட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் மேலும் பல சாமான்களை ஏற்றிக்கொண்டு வந்தது. பங்களாவுக்கு வந்து வசிக்கப் போகிறவர்கள் பணக்காரர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று ரமேஷ் முடிவு செய்தான். ஆனால் அவனுக்கு மகிழ்ச்சி ஏற்படுத்துவதற்கு இது போதாதே! அவன் தெரிந்து கொள்ளத் துடித்த விஷயம் வேறு. அவர்கள் வீட்டில் குழந்தைகள் இருப்பார்களா? பரஞ்ச்பேயின் குழந்தைகளான சந்து, சோட்டு, பேபி ஆகியவர்களைப்போல் இவர்கள் விளையாடுவதில் விருப்பம் உள்ளவர்களாக இருப்பார்களா?

அடுத்து இரண்டு நாட்களும் ரமேஷ் பலகணியில் நின்றவாறே, புதிதாகக் குடிவந்தவர்களுடைய வீட்டில் குழந்தைகள் யாரேனும் இருக்கிறார்களா என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளப் பாடுபட்டு முயன்றான். வீட்டின் முன்புறமுள்ள சிறு தோட்டத்திலோ, அல்லது ஜன்னல்களின் அருகிலோ அவன் குழந்தைகள் யாரையும் காணவில்லை. அவனுடைய மனம் சோர்ந்தது.

சனிக்கிழமை காலையில் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தபோது சற்றுத் தூரத்திலிருந்தே பங்களாவின் பக்கம் பார்வையைச் செலுத்தினான். தன் வயதையொத்த ஒரு சிறுமி கதவருகில் நின்று கொண்டிருப்பதைக் கவனித்தான். அவள் சில்க் சட்டை அணிந்திருந்தாள். பட்டாம் பூச்சியின் உருவம் அதன்மீது அச்சிடப்பட்டிருந்தது. கால்களில் அழகான 'கான்வஸ் ஷூ' அணிந்திருந்தாள். நீல ரிப்பனால் பின்னலைக் கட்டியிருந்தாள்.

ரமேஷின் மனம் பூரித்தது. அழகான ஒரு சிறுமியைக் கண்டதனால் அல்ல; அவள் அந்த வீட்டில் வசிக்கிறாள்

என்ற எண்ணத்தினுல். அவளை நெருங்கியதும் அவளிடம் என்ன பேசுவது என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்பியதால் அவன் மெதுவாக நடக்கத் தொடங்கினுன் முன்பின் தெரியாத பெண்ணிடம் என்ன பேசுவது என்பதைத் தீர்மானிப்பது அவனுக்கு சுலபமாக இருக்கவில்லை.

" இரண்டு நாட்களுக்கு முன்புதான் இந்த வீட்டுக்குக் குடிவந்தீர்கள். இல்லையா?" என்று கேட்டுப் பேச்சைத் தொடங்குவோம் என்று முடிவு செய்தவனுக வேகமாக நடந்து வந்தான்.

ஆனுல் அவன் அந்த வீட்டுக்கு நேராக வந்ததும் உள்ளேயிருந்து யாரோ " மீரா......மீரா " என்று கூப்பிட்டார்கள். " இதோ வந்துவிட்டேன் " என்று கூறிக்கொண்டே அச்சிறுமி வீட்டுக்குள் ஓடி மறைந்து விட்டாள்.

அவளுடன் பேசும் சந்தர்ப்பத்தை இழந்து விட்டோமே என்று ரமேஷ் பெரிதும் வருந்தினுன். ஆயினும் ஒரு ஆறுதல். ஆடம்பரமாக உடையணிந்த இந்த அழகிய பெண் இவ்வீட்டில்தான் வசிக்கிறுள் என்பதில் சந்தேகம் இல்லை. மேலும் அவளுடைய பெயர் மீரா என்பதும் அவனுக்குத் தெரிந்துவிட்டதே!

இதற்குமுன் இந்தப் பெயரைக் கேள்விப்பட்டது இல்லை. எனவே வீட்டையடைந்ததும் தந்தையிடம் 'மீரா என்று பெயர் இருக்கமுடியுமா?' என்று கேட்டான்.

" இருக்கமுடியுமாவா? என்ன வேடிக்கையானகேள்வி கேட்கிறுய்?" என்று அவன் தந்தை சிணுங்கினுர்.

" வந்து...நான் சொல்வது...அடுத்த வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருக்கிறுர்கள். அவர்கள் வீட்டிலுள்ள பெண்ணுக்குப் பெயர் மீரா " என்றுன் ரமேஷ்.

" இதற்குள் அங்கு போய் பழக ஆரம்பித்து விட்டாயா என்ன ?" என்று கேட்ட தந்தையின் குரலில் அதனை விரும்பாத பாவம் தொனித்தது.

" இல்லே...அந்தப் பக்கமாகப் போகும்போது அவளே அந்தப்பெயரால் அழைப்பதைக் கேட்டேன். பெண்ணுக்கு மீரா என்ற பெயர் வைப்பார்களா அப்பா ?" என்று கேட்டான் ரமேஷ்.

" இந்தப்பக்கத்தில் அந்தப் பெயர் வைப்பது இல்லே. ஆனால் பம்பாயில் சரஸ்வத்துக்கள் பலர் இப்பெயரை வைத்துக் கொள்ளுகிறார்கள்.

ஹிந்து பிராமணர்களிடையே ' சரஸ்வத் ' என்பது ஒரு கிளை ஜாதி என்பது சிறுவன் ரமேஷுக்குத் தெரியாது. லாரியில் வந்து இறங்கிய ஏராளமான சாமான்களைக் கொண்டும் அச்சிறுமி அணிந்திருந்த உடையைக்கொண்டும் அவ்வீட்டிற்குக் குடி வந்திருப்பவர்கள் பணக்காரர்களாக இருக்க வேண்டும் என்று அவன் நம்பினான். எனவே பம்பாயில் பணக்காரர்களை ' சரஸ்வத் ' என்று அழைப்பார்கள் போலிருக்கிறது என்று முடிவு செய்து கொண்டான்.

" நாம் எப்போதுமே ' சரஸ்வத் ' ஆகமுடியாதா ?"

" உன் வாயை மூடிக்கொண்டு என்னைப் படிக்கவிடப் போகிறாயா இல்லையா ?" என்று தந்தை சீறினார்.

மீராவின் வீட்டிற்குள் போவதற்கு ஏதாவது சாக்கு வேண்டுமே! அதைப்பற்றி யோசித்தவனாக ரமேஷ் இரண்டு தினங்களைக் கழித்தான். ஆனால் அவனுக்கு ஒரு வழியும் தோன்றவில்லை. கடைசியாக வெகு நேரம் யோசித்தபிறகு அவனுடைய இளம் மூளையில் ஒரு யோசனை உதித்தது. அதனைப் பிரயோகித்துப் பார்க்க அவன் சிறிதும் தாமதிக்கவில்லை. இரவில் ஊரடங்கிய பின்னர் பலகணியில் நின்று கொண்டிருந்த ரமேஷ் தன்னை யாரும் கவனிக்கவில்லை என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டான். தன்னுடைய காற்

ருடியை எடுத்து அதன் முனையில் சிறு கல் ஒன்றைக்கட்டி அடுத்த வீட்டுத் தோட்டத்தில் விழுமாறு வீசி எறிந்தான். சாமர்த்தியமாக வகுத்த திட்டம் பாதி நிறைவேறியதும், காலத்தில் விதைத்துவிட்டு மழையை எதிர்பார்த்திருக்கும் விவசாயியைப் போல் அன்றிரவு நிம்மதியாகத் தூங்கினான். மறுநாள் காலையில் எழுந்து பங்களாவுக்குச் சென்றான். தோட்டக்கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனான். ஆனால் பங்களாவின் கதவு சாத்தப் பட்டிருப்பதைக் கண்டான்.

கதவைத் தட்டலாமா? அவ்வீட்டிலுள்ளவர்களில் ஒருவருடைய—அதாவது மீராவுடைய பெயர் மட்டும்தான் அவனுக்குத் தெரியும். அறிமுகம் இல்லாத அவளைப் பெயர் சொல்லியழைப்பது சரியாக இருக்குமா என்று அவனால் நிச்சயப் படுத்திக் கொள்ள முடியவில்லை.

அவன் எதிர்பார்த்திருந்தபடி சற்றும் பிசகாமல் அவனுடைய திட்டம் வேலை செய்யவில்லை என்பது அவனுக்கு சற்று வருத்தமளித்தது. அப்போது உள்ளே காலடியோசை கேட்டது. யாரோ கதவைத் திறக்கப் போகிறார்களென்று நினைத்தான். பொங்கும் ஆவலுடன் கதவையே பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். அடுத்த கணம் கதவு திறந்தது. ஆனால் அங்கே மீரா காணப்படவில்லை.

மாறாகச் சற்று வயதான ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவரை ஆராய்வது போல் ரமேஷ் கூர்ந்து கவனித்தான்.

செக்கச் செவேரென்று நல்ல கவர்ச்சியாக இருந்தார். அப்பாவைவிட வயதில் இளையவராக இருக்க வேண்டும் என்று ரமேஷ் கருதினான். ஆனால் பளபளக்கும் வழுக்கைத் தலையையுடையவராக இருந்தார். ஆஜானுபாகுவான உடற்கட்டு. பைஜாமாவும் நீல நிறத்தில் பட்டைக் கோடு போட்ட

சட்டையும் அணிந்திருந்தார். ரமேஷுக்கு இந்த உடை விசித்திரமாகப் பட்டது. இதற்கு முன் யாரும் இத்தகைய உடையணிந்திருந்ததை அவன் பார்த்ததில்லை. அவர் தன்னைப் புன்முறுவலுடன் நோக்குவதை ரமேஷ் உணர்ந்தான்.

"மன்னிக்க வேண்டும். என்னுடைய காற்றாடி உங்கள் தோட்டத்தில் எங்கோ விழுந்து விட்டது. நான் தேடி எடுத்துக்கொள்ளலாமா?" என்று கேட்டான்.

அவர் ரமேஷை உன்னிப்பாகப் பார்த்துவிட்டு இளநகை செய்தார். "உன்னுடைய காற்றாடியா? நீ யார் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?"

"நான் ரமேஷ். அடுத்த வீட்டில் இருப்பவருடைய பிள்ளை."

"ஓ அப்படியா" என்று கூறி சட்டைக்கையைஉயர்த்தி விட்டுக் கொண்ட அவர் "தாராளமாக உன் காற்றாடியைத் தேடி எடுத்துக் கொள்ளலாம். உன்னால் தேடி எடுக்கமுடியுமா? அல்லது நானும் உதவி செய்யட்டுமா" என்று கேட்டவாறே முன்னால் நடந்து வந்தார்.

"வேண்டாம் நீங்கள் சிரமப்பட வேண்டாம். நானே தேடி எடுத்துக்கொள்கிறேன்" என்று கூறிய ரமேஷ் அவரைத் தடுத்தான்.

பின் தோட்டத்துக்குள் ஓடிச்சென்று ஒரு பூச்செடியருகே இருந்த காற்றாடியை எடுத்து வந்தான். "இதோ காற்றாடி கிடைத்து விட்டது" என்றான்.

"உனக்குக் காற்றாடி விடத் தெரியுமா?"

"ஓ தெரியுமே. அதில் நான் ரொம்பவும் தேர்ந்தவன் தெரியுமா?"

"ரொம்பத் தேர்ந்தவனா? சபாஷ். உன்னால் என்னை தோற்கடிக்க முடியுமா? பந்தயம் போட்டுப் பார்க்கலாமா?,

வயதான ஒருவர் தன்னுடன் காற்றாடி விட வருவதாகச் சொன்னது ரமேஷுக்கு வியப்பாக இருந்தது. அவனுடைய அப்பா அதுபோல் செய்ததே இல்லை. மாறாக காற்றாடி விடுவதற்காக அவனைக் கண்டிப்பார். எனவே இந்த மனிதரை அவன் மிகவும், விரும்பத் தொடங்கினான். " இப்போதே போய்க் காற்றாடி விடலாமா ?" என்றான்.

" இப்போது வேண்டாம். எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது " என்றார் அவர்.

" அப்படியானால் மீராவை ஏன் என்னோடு அனுப்பக் கூடாது?"

"மீராவையா? அவளுக்குக் காற்றாடி விடத் தெரியாதே"

" நீங்கள் அவளுக்குக் கற்றுத்தர வில்லையா? ஒரு விளையாட்டுமே அவளுக்குத் தெரியாதா ?"

" தெரியாமல் என்ன ? ரப்பர் பந்தை வைத்துக் கொண்டு விளையாடுவாள்."

" தரையில் தட்டி ஒன்று, இரண்டு என்று எண்ணும் விளையாட்டைத் தானே சொல்கிறீர்கள் ? எனக்கும் அந்த விளையாட்டு தெரியுமே. ஐநூறு அறுநூறு வரை நான் எண்ணுவேன். ஆனால் தற்சமயம் என்னிடம் பந்து இல்லை. நான் பல பந்துகளைத் தொலைத்து விட்டேன் என்று அப்பாவுக்குக் கோபம். இனிமேல் வாங்கித்தர முடியாதென்று சொல்லி விட்டார். "

" அப்படியா ? புதிய பந்து ஒன்றை நான் தரட்டுமா ? உள்ளே வாயேன் " என்று ரமேஷை உள்ளே வரச்செய்த அவர் " மீரா...மீரா!...இதோபார் விளையாட்டுத்தோழன் ஒருவனை அழைத்து வந்திருக்கிறேன் " என்றார்.

அவரைப் பின்தொடர்ந்து வீட்டுக்குள் சென்ற ரமேஷ் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தான். இதற்கு முன் பெரியவர்கள் யாரும் அவனிடம் இவ்வளவு இனிமையாகப்

பேசியது இல்லை. இவரை அவனுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது.

அடுத்த கணம் உள்ளேயிருந்து ஓடி வந்த மீரா அவன் முன்னால் வந்து நின்றாள்.

இன்று அவள் ஆரஞ்சு நிறத்தில் 'கௌனும்' அதற்கு பொருத்தமான 'கான்வஸ்ஷூ'வும் அணிந்து கொண்டிருந்தாள். ஆயினும் அழகான ரிப்பன் கட்டிய கவர்ச்சியான தலைப்பின்னல் மட்டும் அப்படியே இருந்தது.

அடுத்து ஒரு வார காலத்தில் மீராவுக்கும் ரமேஷூக்குமிடையே மிகவும் நெருக்கமான தோழமை உறவு ஏற்பட்டு விட்டது. இப்பொழுதெல்லாம் ரமேஷை அவனுடைய வீட்டில் காண்பதே அரிதாகி விட்டது. எப்போதும் மீராவின் வீட்டிலேயே இருக்கத் தொடங்கினான். சாப்பாட்டு நேரத்துக்கு அவனுடைய அம்மா தான் போய் அவனை இழுத்துக்கொண்டு வரவேண்டியிருந்தது. ஞாயிற்றுக்கிழமைகளிலும் இதர விடுமுறை நாட்களிலும் நாள் முழுவதும் மீராவின் வீட்டிலேயே இருப்பான். "இன்னொருவர் வீட்டிலே போய் இப்படி இருப்பது சரியல்ல" என்று அவனுடைய அப்பாவும் அம்மாவும் எடுத்துச் சொல்வார்கள். ஆனால் அவன் அதை ஏற்றுக்கொள்வதில்லை. "பரஞ்பே அந்த வீட்டில் இருந்தபோது நான் அடிக்கடி அங்கு போவது இல்லையா?" என்று வாதம் செய்வான்.

"அது வேறு விஷயம். பரஞ்ச்பே நல்லவர்" என்பார் தந்தை.

"மீராவினுடைய அப்பா கெட்டவரா?" என்று கேட்பான் ரமேஷ். "ஆமாம்" என்று கூறித் தலையை ஆட்டுவார் அவனுடைய தந்தை. இப்படி அவனுடைய தந்தை கூறும்போதெல்லாம் ரமேஷ் மிகவும் கோபம் அடைவான். பெற்றோர்களுடன் வாதம் செய்வதை விட்டு விடுவான். எப்

போதும் போல் மீராவின் வீட்டுக்குத் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான்.

ஆயினும் உள்ளூர அவன் மனம் சற்றுக் குழப்பம் அடைந்தது. தன்னுடைய பெற்றோர்கள் மீராவின் குடும்பத்தினரை ஏன் தாழ்வாக எண்ண வேண்டும் என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவ்வளவு அருமையான ஒரு குடும்பத்தை காண்பதே கடினம் என்பது அவனுடைய சொந்த எண்ணமாகும். மீரா மிக மிக அருமையான பெண் ; அதில் சந்தேகமே இல்லை. அவளையும்விட அதிகமாக அவளுடைய தந்தையை அவன் விரும்பத் தொடங்கினான். அவளுடன் விளையாடும் ஆசையினால் மட்டும் அவன் அவ்வீட்டுக்குப் போகவில்லை. அவளுடைய தந்தையுடன் பேசுவதும் அவர் சொல்வதைக்கேட்பதும் அவனுக்கு இன்பமளிப்பதாக இருந்தன. அவர் அற்புதமான முறையில் கதைகளைச் சொல்வார். அதைக்கேட்டு ரமேஷின் உள்ளத்தில் மகிழ்ச்சியும் துக்கமும் வியப்பும், இரக்கமும் நிரம்பி வழியத் தொடங்கும். மீராவின் அப்பா பல விதமாகக் குரலை மாற்றிக் கொண்டு பேசத் தெரிந்தவர். ஆண்களைப் பற்றிக் கதை சொல்லும் போது அவர் ஆண் குரலில் பேசுவார். கதைகள் பெண்களைப் பற்றியதாக இருக்கும்போது ஒரு பெண் பேசுவது போலவே அவருடைய குரல் இருக்கும். அவர் கதை சொல்லும் விதம் ரமேஷின் உள்ளத்தைத் தொடுவதாக இருக்கும். அப்போது அவர் மீராவின் அப்பாவாக இருக்கமாட்டார். சிவாஜி, ஜான்சிராணி பற்றிய கதைகளைக் கூறும்போது அந்தப் பாத்திரங்களாகவே மாறி விடுவார்.

" ரமேஷ் ! அப்பாவுடைய போட்டோக்கள் சிலவற்றைப் பார்க்க உனக்கு இஷ்டமா ?" என்று ஒரு நாள் மீரா கேட்டாள்.

" எங்கே பார்க்கலாம்?" என்றான் ரமேஷ் ஆவலுடன்.

ஒரு பெரிய 'ஆல்பத்'தை எடுத்து அவள் காட்டினுள்.

அதிலிருந்த படங்களைப்பார்த்த ரமேஷுக்கு ஏற்பட்ட வியப்புக்கும் மகிழ்ச்சிக்கும் அளவே இருக்கவில்லை. மீரா வின் தந்தையிடம் அவனுக்கு எல்லையற்ற மதிப்பு ஏற்பட் டது. 'எவ்வளவு அழகான வேஷங்கள்' என்று ரமேஷ் எண்ணினுன். ஒரு போட்டோவிலாவது அவர் இயல்பாக இருப்பது போல் இல்லை.

ஒரு பக்கத்தைப் புரட்டிய போது "அடடே! இது பிரமாதம்" என்ருன் ரமேஷ்.

அவன் அதைக் கூர்ந்து பார்க்க விரும்பினுன், ஆனுல் மீரா அவசர அவசரமாக அந்தப் பக்கத்தைத் திருப்பினுள். "அந்தப் போட்டோவைப் பார்க்காதே. எனக்கு அதைக் கண்டாலே வெறுப்பு. ஒரு நாள் ஆல்பத்திலிருந்தே அந்த போட்டோவை கிழித்தெறிந்து விடப் போகிறேன்" என் ருள் மீரா.

"ஏன்?" என்று கேட்டான் ரமேஷ், சற்று குழப்ப மடைந்தவனுக.

மீரா பதிலேதும் சொல்லவில்லை. ஆனுல் அவளுடைய கண்கள் கலங்கின. அவள் துயரத்தையடக்கிக் கொள்ள உதட்டைக் கடித்துக்கொள்வதை ரமேஷ் உணர்ந்தான்.

அந்த போட்டோவில் மீராவின் தந்தை பாவு, கந்தல் சட்டையும் வேட்டியும் அணிந்திருந்தார். கரடு முரடான தாடி காணப்பட்டது. தலை மயிர் கலைந்து கிடந்தது. ஒரு கையில் கண்ணுடி தம்ளரைப் பிடித்துக் கொண்டு மற்ருெரு கையிலிருந்த புட்டியிலிருந்து எதையோ ஊற்றிக்கொண் டிருந்தார்.

அந்த போட்டோ எதைக் குறிக்கின்றது என்பதை ரமேஷ் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. மீரா ஏன் அந்தப்பக்கத்தை அவசரமாகப் புரட்டினுள்? அதை ஏன் கிழித்தெறிந்து விடப்பொவதாகச் சொன்னுள்? அவளு

டைய கண்கள் ஏன் கலங்கின? என்பதெல்லாம் அவனுக்கு விளங்கவில்லை.

மீராவின் தந்தை நடிப்புத் தொழிலில் ஈடுபட்டவர் என்பது ரமேஷுக்கு நாளடைவில் தெரிய வந்தது. அவர் ஏராளமான பணம் சம்பாதித்திருக்க வேண்டும்; அதே போல் செலவழித்தும் இருக்க வேண்டும் என்று தோன்றியது. இப்போதும் கூட அவர் படங்களில் நடிப்பதுண்டு. அந்த ஊரில் தயாராகிக் கொண்டிருந்த ஒரு சினிமாப் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டிருந்ததால்தான் அவர் பம்பாயிலிருந்து இந்த இடத்துக்கு வந்திருந்தார்.

இதன் காரணமாகவும் ரமேஷுக்கு அவரிடம் மேலும் பிரியம் அதிகரித்தது. அவனுடைய அப்பா அவனை அதிக சினிமாப் படங்கள் பார்க்க அழைத்துச் சென்றது இல்லை. அவன் பார்த்த சில படங்கள் அவனுக்குப் பிடித்திருந்தன. சில படங்களை 'மோசம்' என்று பெரியவர்கள் ஏன் சொல்கிறார்கள் என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. 'எல்லாப் படங்களும் நன்றாகத்தான் இருக்கும். குழந்தைகளை அழைத்துப் போகாமலிருந்து இதன் மூலம் பணம் மிச்சப்படுத்துவதற்காகத்தான் பெரியவர்கள் சில படங்களை மோசம் என்று சொல்கிறார்கள்' என்பது அவனுடைய சொந்த எண்ணமாகும். அப்பாவைப்போல் பெரியவனானதும் செய்யவேண்டுமென்று அவன் போட்டிருந்த திட்டங்கள் பல. ஊருக்கு வரும் எல்லாப் படங்களையும் பார்க்க வேண்டும். அவற்றிற்கெல்லாம் தன் குழந்தைகளையும் கூட்டிப்போக வேண்டும் என்பது அவனுடைய திட்டங்களில் முக்கியமான ஒன்றாகும்.

ஒருநாள் பாவு, ரமேஷையும் மீராவையும் தன்னுடன் ஸ்டுடியோவுக்கு அழைத்துப் போனார். இதற்குத் தன் தந்தையின் அனுமதியைப் பெற வேண்டும் என்பது ரமேஷுக்குத் தெரியும். கேட்டால் அனுமதி கிடைக்காது

என்பதையும் அவன் அறிவான். எனவே அவன் கேட்கவே இல்லை. அப்பாவின் அனுமதியைக் கேட்டாயா என்று பாவு கேட்டதற்கு அவன் சிறிதும் தயங்காமல் அனுமதி பெற்று விட்டதாகக் கூறினான். பாவுவிடம் அவன் கூறிய முதல் பொய் இதுதான். அது நியாயமென்றே அவனுக்குத் தோன்றியது. ஸ்டுடியோவில் அவன் கண்ட காட்சிகளால் அவன் பிரமித்துப் போனான்.

"நானும் பெரிய சினிமா நடிகனாகப் போகிறேன்" என்றான் வீடு திரும்பியதும் ரமேஷ்.

"ஓ அதற்கென்ன. அப்படியே ஆகலாம்."

"அப்போது எனக்கு ஒரு வேஷம் கொடுப்பீர்களா? வேண்டுமானால் பாடிக் காட்டட்டுமா?" என்றான் ரமேஷ்.

பாவு சிரித்தார்.

"நிஜமாகவே எனக்கு சினிமாவில் நடிக்க ஆசை. ஒரு வேஷம் கொடுங்கள்" என்று வேண்டினான்.

"சரி, தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை."

"என்ன அது?"

"உனக்கு இறுதியாண்டுப் பரீட்சை நெருங்கிக் கொண்டிருக்கிற தல்லவா? அதில் நிறைய மார்க் வாங்கி வகுப்பில் முதல் பையனாக வரவேண்டும்."

இதைக் கேட்ட ரமேஷுக்கு திடீரென்று சோர்வு ஏற்பட்டது. "முடியாது, முடியாது, இது மிகவும் கஷ்ட மான நிபந்தனை" என்று அவன் ஆட்சேபித்தான் தடு மாறும் குரலில்.

"அதைக் கஷ்டமான நிபந்தனையாக ஏன் நினைக்கிறாய்?" என்று அவர் கேட்டார்.

"பூகோள பாடம் எனக்கு சுட்டுப்போட்டால் கூட நினைவில் தங்குவது இல்லை. கணக்கை நினைத்தாலோ பயங் கரம்..."

"அதனுல் பரவாயில்லை" என்று அவர் அவனை முதுகில் தட்டிக் கொடுத்தார். "இந்த இரண்டையும் நான் உனக்கு சொல்லித் தருகிறேன்; இவற்றில் தேர்ச்சி பெற்றவனாக்கி விடுகிறேன். நீயும் முயற்சி செய்து படிக்க வேண்டும்."

"சரி" என்ருன் ரமேஷ்.

மறுநாளே பூகோளமும், கணக்கும் சொல்லிக் கொடுக்கும் பணி தொடங்கி விட்டது. இப்போது முன்பைவிட மேலும் அதிக நேரம் அவன் மீராவின் வீட்டில் இருக்கத் தொடங்கினுன். தான் பயந்து நடுங்கிக்கொண்டு இருந்த பூகோளமும், கணக்கும் பாவு சொல்லிக் கொடுத்த முறையிலிருந்து மிகவும் சுவாரஸ்யமான பாடங்களாக இருந்தன. அவர் பேசிய விதமும் தன்னுடன் காற்ருடிவிட வருவதாக சொன்னதும் முதலில் அவரிடம் அவனுக்கு விருப்பையூட்டின. அடுத்து அவர் கூறிய கதைகளில் ரமேஷ் மனதைப் பறிகொடுத்திருந்தான். அவர் மீராவிடம் அன்பைபொழிந்த நூற்றுக்கணக்கான சந்தர்ப்பங்களை அவன் கண்டிருக்கிருன். அவருடைய அன்பு இதயம் அவனை மிகவும் கவர்ந்தது. பாடம் சொல்லிக் கொடுப்பதிலும் பிரமாதமான கெட்டிக்காரர் என்பதை இப்போது தெரிந்து கொண்டான். அவரைப்போல் இந்த உலகத்தில் யாருமே இருக்க முடியாது என்ற முடிவுக்கு அவன் வந்து விட்டான். மீராவின் வீட்டில் அவன் சாப்பிடுவதும் தூங்குவதும் இல்லை. மற்றபடி அவ்வீட்டில் மீராவுக்கும் அவனுக்குமிடையே யாதொரு வித்தியாசமும் இல்லை.

இதையெல்லாம் அவனுடைய பெற்ருேர்கள் விரும்பவில்லை. "ரமேஷ், மீராவின் வீட்டு வாசற்படியேறுவதை இன்னொரு முறை பார்த்தால் செம்மையாக அடிப்பேன்" என்று தந்தை அடிக்கடி எச்சரிப்பார். மிரட்டியதைப் போல் அடி கிடைக்காதவரையில் தன் போக்கை மாற்றிக்

கொள்ள வேண்டியதில்லை என்று ரமேஷ் தீர்மானித்தான்.

"மீராவின் வீட்டுக்கு நான் போவதில் தவறு என்ன?" என்று சில சமயங்களில் தந்தையைக் கேட்பான்.

"சொன்னால் உனக்குப் புரியாது" என்பார் அவர்.

"பாவுவை நான் ஏன் நேசிக்கிறேன் என்று உங்களுக்கும் புரியாது" என்று ரமேஷ் தனக்குள் சொல்லிக் கொள்வான். மேற்கொண்டு எதுவும் பேசமாட்டான். வழக்கம் போல் ஒவ்வொரு நாள் காலையிலும் மாலையிலும் மீராவின் வீட்டுக்குப் போய் வந்துகொண்டிருப்பான்.

தந்தையும், தெருவிலுள்ள மற்றவர்களும் பாவுவை கெட்டவர் என்று ஏன் கருதுகிறார்கள் என்று அவன் மனதுக்குள் வியந்து கொண்டிருப்பான். பரஞ்ச்பே வீட்டுக்கு அவன் போனதை யாரும் கண்டிக்க வில்லை. மீராவின் வீட்டுக்குப் போவதை மட்டும் ஏன் அவர்கள் ஆட்சேபிக்க வேண்டும்? இந்தக் கேள்விக்கு அவனால் விடைகாண முடியவில்லை.

ஒரு சமயம் இரவில் அவன் படுத்துக்கொண்டு இருந்த போது அவனுடைய தந்தையும் வீட்டுக்கு வந்த விருந்தினர்கள் சிலரும் மீராவின் தந்தையைப் பற்றிப் பேசுவதை அவன் கேட்டான். அவர்கள் சொன்ன சில விஷயங்கள் அவனுக்கு அதிர்ச்சியளித்தன. "பாவு பெருங்குடிகாரன்... ஏகமாகக் குடித்து விட்டு சாக்கடையில் விழுந்து கிடப்பான்...நடுராத்திரியில் வீட்டுக்கு வந்து தாறுமாறாகக் கத்துவான்; மனைவியை அடிப்பான்...ஆயிரக் கணக்கான ரூபாய்களைக் குடித்தே தொலைத்து விட்டான்...சிறந்த நடிகன் தான்...என்ன பிரயோசனம்...ஒரு மனிதனுக்கு ஒழுக்கம் வேண்டாமா?...பக்கத்து வீட்டுக்கு அவன் குடிவராமல் இருந்திருந்தால் நன்றாக இருக்கும்..."

எவ்வளவு நேரம் அவர்கள் பேசினார்களென்பது ரமேஷுக்குத் தெரியாது. அவர்கள் விடைபெற்றுச் சென்றதும் விளக்கு அணைந்தது. எங்கும் அமைதி நிலவியது. ரமேஷுக்குத் தூக்கம் வரவில்லை. 'மனிதனுக்கு ஒழுக்கம் வேண்டும்' என்ற வார்த்தைகள் அவன் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. ஒழுக்கம் என்றால் என்ன அர்த்தம்? அதன் அர்த்தத்தை ரமேஷ் தனது புத்தகம் எதிலும் காணமுடியவில்லை. மீராவின் தந்தை ஒரு குடிகாரராக இருக்க முடியும் என்று அவன் கற்பனைகூட செய்தது இல்லை. ஆல்பத்திலிருந்த அந்த போட்டோவின் நினைவு இப்போது திடீரென்று அவனுக்கு வந்தது. நாடகம் அல்லது சினிமாவில் குடிகாரன் வேஷத்தில் நடித்தபோது எடுத்த படமாக அது இருக்கும் என்றவன் எண்ணியிருந்தான். போட்டோவில் தோற்றமளித்தது போலவேதான் உண்மை வாழ்க்கையிலும் இருக்கிறாரா? ஒழுக்கம் இல்லை என்பதற்கு இதுதான் அர்த்தமா? தந்தையும் மற்றவர்களும் பாவுவை வெறுப்பதற்கு ஒழுக்கம் இல்லையென்பது போதுமான காரணம் ஆகுமா? தனக்குத் தெரிந்த அளவு நெருக்கமாக பாவுவை அவர்களுக்குத் தெரியுமா? எப்போதுமே அவன் பாவுவிடம் அன்பு செலுத்த விரும்பினான். அவருக்கு அடங்கி நடக்கவும் அவருடன் இருக்கவும் விரும்பினான். அவர் குடிப்பழக்கம் உடையவர் என்பதைத் தெரிந்து கொண்ட பின்னரும் அவரிடம் அவனுக்கிருந்த அன்பும் மதிப்பும் சற்றும் குறையவில்லை.

எப்போது தூக்கம் தன்னை ஆட்கொண்டது என்பது ரமேஷுக்கே தெரியாது.

காலையில் வழக்கம்போல் மீராவின் வீட்டுக்குப் போனான். அப்போது அவர் குளித்துவிட்டுத் தம் தலையை சீவிக்கொண்டே மீராவுக்கு ஆங்கிலப் பாடம் சொல்லிக் கொண்டிருந்தார். ரமேஷைக் கண்டதும் புன்சிரிப்புடன்

வரவேற்ருர். "மகராஷ்டிரத்திலுள்ள நதிகளின் பெயர்களை எல்லாம் சொல்லு பார்க்கலாம்" என்ருர்.

முன்தினம் அவர் மகராஷ்டிரத்திலுள்ள நதிகளையெல்லாம் கரும்பலகையில் படம் வரைந்து காட்டினுர். ரமேஷ் அவற்றை மனப்பாடம் செய்து கொள்ள வில்லை. இருந்தும் எல்லாவற்றையும் ஒரு தவறுகூட இல்லாமல் சொன்ஞன்.

சபாஷ் என்று அவர் அவனை முதுகில் தட்டிக்கொடுத்தார்.

திடீரென்று ரமேஷ் அழத் தொடங்கினுன். அன்புடன் அவனைத் தடவியவாறே ஏன் அழுகிருய் என்று கேட்டதும் விசும்பத் தொடங்கினுன்.

வீடு திரும்பியதும் "ரமேஷ்! வா இங்கே" என்று தந்தை இரைந்து கூப்பிடுவதைக் கேட்டான்.

ரமேஷ், தந்தையின் அறைக்குள் சென்ருன்.

"உனக்கு சரியான பூசை வேண்டும் போலிருக்கிறது" என்ற அவருடைய கண்கள் கோபத்திஞல் ஜொலித்தன. "மீராவின் வீட்டுக்குப் போகக்கூடாது என்று உனக்கு ஆயிரம் முறை சொல்லி இருக்கிறேன். சொல்லியும் தொடர்ந்து முட்டாள்தனத்தைச் செய்து வருகிருய். நான் சொல்வதைக் கேட்க மாட்டாயா?"

அவர் கத்திய விதம் அவரிடம் அவனுக்குக் கோபம் உண்டாக்கியது. பற்களைக் கடித்தவாறே உள்ளம் குமுற சுவற்றில் சாய்ந்துகொண்டு மௌனமாக நின்றிருந்தான். தந்தை கையில் பிரம்பை எடுப்பதை அவன் கண்டான்...

இதன்பின் ஒரு வாரம் ஓடிவிட்டது.

இப்போதெல்லாம் ரமேஷ் வேறு வழியாகத்தான் பள்ளிக்குச் செல்வது வழக்கம். வீட்டுப் பலகணியில் நிற்பதே இல்லை.

ஒரு நாள் பள்ளியிலிருந்து திரும்பிவந்ததும் வீட்டுக்கு முன்னால் பள்ளித் தோழன் ஒருவனுடன் பேசிக்கொண்டு நின்றிருந்தபோது பின்னாலிருந்து வந்த யாரோ ஒருவர் அவன் முதுகில் தட்டிக்கொடுத்தார். ரமேஷ் சட்டென்று திரும்பிப்பார்த்தான். பாவு புன்சிரிப்புடன் நின்றுகொண்டிருப்பதைக் கண்டான்.

"ரமேஷ்! இவ்வளவு நாட்களாக எங்கே போயிருந்தாய்? ஏன் வீட்டுக்கு வரவில்லை? நீ இல்லாமல் மீராவுக்குப் பொழுதே போகவில்லை. பரீட்சையில் முதல் மார்க் வாங்கவேண்டும் என்ற விருப்பத்தை மாற்றிக்கொண்டு விட்டாயா என்ன? என்னுடன் வா போகலாம். உனக்காக மகராஷ்டிராவின் களிமண் மாடல் ஒன்று தயார் செய்து வைத்திருக்கிறேன். ஒருமுறை இதனைப் பார்த்து விட்டால் அதிலுள்ள மலைகளையும் நதிகளையும் நினைவில் வைத்துக் கொள்வதில் கஷ்டமே இராது" என்றார்.

ரமேஷ் பரபரப்புடன் ஒரு முறை அவரைப் பார்த்தான். மறுகணம் கையையாட்டியவாறே "வேண்டாம் மாட்டேன்" என்று கத்திவிட்டு வீட்டுக்குள் ஓடி ஒளிந்து கொண்டான். அறைக்கதவைப் படீரெனச் சாத்திவிட்டு தூசி படிந்த தரையில் விழுந்து தேம்பி அழுதான். அவனுடைய உள்ளத்து வேதனைகளைப் புரிந்துகொள்ளக் கூடியவர்கள், கள்ளங்கபடற்ற மலரனைய இதயம் நொறுங்கி விட்ட துடிப்பை புரிந்து கொள்ளக் கூடியவர்கள் உலகில் யாருமே இல்லை என்பது அவனுக்கு தெரியும்.

# மனப் போராட்டம்

செங்குத்தான பாதையில் தன் சிறு ஆட்டு மந்தையைச் சாவதானமாக வீடு நோக்கி நடத்தி வந்துகொண்டிருந்த பார்வதி சட்டென நின்ருள்.

புதர் அருகே ஒரு துண்டுக் காகிதம் காற்றில் படபடப்பதை அவள் கண்டுவிட்டாள்.

புதரை நோக்கி நடந்தாள். தன் கையிலிருந்த தடியிஞல் முட்களை விலக்கிவிட்டுக் காகிதத்தைக் கையில் எடுத்தாள். காற்றிஞல் எங்கிருந்தோ அடித்துக்கொண்டு வரப்பட்டிருந்த பத்திரிகைக் காகிதம் அது. வெயில் மழையில் அடிபட்டு நிறம் மாறியிருந்தது. பெரும் பொக்கிஷம் கிடைத்ததைப்போல் பெருமையுடன் அதனைக் கையில் பிடித்திருந்த பார்வதி மங்கிக்கொண்டிருந்த மாலை ஒளியில் அதைப் படிக்கும் உத்தேசத்துடன் ஒரு பாறை மீதமர்ந்தாள். சரியாகச் சொல்வதாஞல் அந்தத் துண்டுக் காகிதத்தில் அச்சிடப்பட்டிருந்த எழுத்துக்களை என்னவென்று புரிந்துகொள்ள முயன்ருள். ஏனென்ருல் அவள் கற்றுக்கொண்டிருந்ததெல்லாம் அவ்வளவுதான். இருந்தபோதிலும் அதில் அவளுக்கு மிகவும் ஆசை. வீதியில், சந்தையில்,

கோயிலில், வயலில் எங்கு ஒரு துண்டுக் காகிதம் அவள் கண்ணில் பட்டாலும் பரபரப்புடன் அதை எடுத்து அதில் அச்சிட்டுள்ளதை எழுத்துக் கூட்டிப் படிப்பாள். இப்போதும் பாறையில் அமர்ந்து கையில் கிடைத்த காகிதத்தில் இருந்த எழுத்துக்களைப் படிப்பதில் ஆழ்ந்து போயிருந்த பார்வதி தான் ஓட்டிவந்த ஆடுகளையே மறந்துவிட்டாள்.

தன் மாடுகளை ஓட்டிக்கொண்டு தினந்தோறும் அவளுடன் துணையாக வரும் மாது இதைக் கண்டு கோபம் அடைந்தான். "ஏ! என்ன இப்படி உட்கார்ந்து விட்டாய்? காலத்தில் வீடு திரும்ப வேண்டாமா?" என்று கேட்டான்.

"நீ போய்க்கொண்டே இரு. ஒரு நிமிடத்தில் நான் வந்துவிடுகிறேன்" என்று தன் தலையை நிமிர்த்தாமலே பார்வதி கூறினாள். அவளுடைய கண்கள் காகிதத்தில் பதிந்திருந்தன. வெளிச்சம் மறைவதற்குள் அதிலுள்ளதை அவள் படித்துவிட விரும்பினாள்.

அவளோடு வாதம் புரிவதில் பலன் இல்லை என்பதை மாது புரிந்து கொண்டான். அவளையே ஒரு கணம் பார்த்துக் கொண்டிருந்தான். அவளுக்கு மூளை கெட்டுப் போயிருக்க வேண்டும் என்று தீர்மானித்தான். அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஏன்? கிராமத்திலுள்ள யாருக்குமே தெரியாது. வீதியில் பறந்து வரும் காகிதத் துண்டுகளை எடுத்து அதனை வெறித்துப் பார்த்துக்கொண்டிருப்பது பைத்தியக்காரத்தனம் என்று அவர்கள் சொல்லி விடுவார்கள். ஒரு மாத காலத்துக்கு முன்பாக இருந்தால் பார்வதிகூட அதைப் பைத்தியக்காரத்தனம் என்றுதான் சொல்லியிருப்பாள். இப்போது அவள் பழைய தற்குறி பார்வதி அல்ல. அவள் இப்போது மாறிவிட்டாள். சாமான்களைப் பொட்டலம் கட்டுவதற்குத்தான் காகிதம் பயன்படும் என்று முன்பு அவள் கருதிவந்தாள். இப்போது

அதற்கு வேறு உபயோகம் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டிருந்தாள். காகிதத்தில் எழுத்துக்கள் அச்சிடப்பட்டுள்ளன. அதை முயன்று படிப்பது வேடிக்கையாக இருக்குமென்பதைத் தெரிந்துகொண்டிருந்தாள். தான் படித்துப் புரிந்துகொண்ட எழுத்துக்களில் பொருளும் இருப்பது கண்டு சில சந்தர்ப்பங்களில் அவளுக்கு உற்சாகம் ஏற்பட்டிருக்கிறது.

பார்வதிக்குப் படிப்பு வாசனை ஏற்பட்ட அனுபவம் யதேச்சையாக நேர்ந்ததாகும். நான்கு வாரங்களுக்கு முன்பு கிராமப் பெரிய பணக்காரருடைய மகள் குஸும் விடுமுறையைத் தந்தையுடன் கழிக்க வந்திருந்தாள். அவளுடைய கைக்குழந்தையைக் கவனிக்க ஓர் ஆள் தேவைப்படவே அவ்வேலைக்குப் பார்வதியை நியமித்துக்கொண்டாள். "பெரும் பகுதிப் பொழுதை வீணாகவே கழிக்கிறாயே. உனக்கு எழுதப் படிக்கச் சொல்லித்தருகிறேன். கற்றுக் கொள்கிறாயா?" என்று அவள் பார்வதியைக் கேட்டாள்.

பார்வதிக்கு இதைக் கேட்டுத் தூக்கிவாரிப் போட்டது. "என் அப்பாவுக்குக்கூட எழுதப் படிக்கத் தெரியாது. என்னைப் படிக்க வேண்டும் என்கிறீர்களே. என்னைப் போன்ற ஒரு பெண்ணுக்கு படிக்கவும் எழுதவும் கற்றுக் கொள்வதால் என்ன பிரயோசனம் இருக்கிறது?" என்று கேட்டாள்.

படிப்பின் அவசியம் பற்றி குஸும் அழகாக ஒரு சிறு பிரசங்கமே செய்துவிட்டாள். பின் பார்வதியை வற்புறுத்தி தன்னிடம் பாடம் கற்றுக்கொள்ளச் செய்தாள். ஒரு மாத காலத்துக்குள் பார்வதி அரிச்சுவடியைக் கற்றுக்கொண்டு விட்டாள். இயற்கையிலேயே அவள் மிகவும் புத்திசாலி. இதனால் மகிழ்ச்சியடைந்த குஸும் விருப்புடன் அவளுக்குப் பாடம் சொல்லிக்கொடுத்து வந்தாள். ஆனால் திடீரென்று அவள் கிராமத்தை விட்டுப் போக நேர்ந்தால்

பார்வதியின் படிப்புக்கு முடிவேற்பட்டு விட்டது. குஸும் போகும்போது நல்லதொரு கருத்தைச் சொல்லிவிட்டுப் போனாள். "இதோ பார் பார்வதி. இப்போது எழுத்துக் கூட்டிப் படிக்கத் தெரிந்துகொண்டு விட்டாய். மேற் கொண்டு சொல்லிக்கொடுப்பவரின் உதவி இல்லாமலே உன் அறிவை நீ வளர்த்துக் கொள்ளலாம். இந்த இரண்டு புத்த கங்களையும் வைத்துக்கொள். மிகவும் எளியவை. திரும்பத் திரும்பப் படி. அச்சிட்ட காகிதம் எது கண்ணில்பட்டாலும் அதை எடுத்துப் படித்துப்பார். படிப்பது புரிகிறதா இல் லையா என்பது குறித்துக் கவலைப்படாதே. எது கிடைத் தாலும் படிப்பது என்று வழக்கப்படுத்திக் கொள். போகப் போக நீயே புரிந்து கொள்ளத் தொடங்குவாய்" என்றாள்.

இந்த போதனைப்படி நடப்பதாக பார்வதி வாக்களித் தாள். அறியாமை இருளில் ஆழ்ந்து கிடந்த ஓர் எளிய கிராமப் பெண்ணின் கண்களைத் திறந்துவிட்டு வாழ்வின் லட்சியத்தையடைய வழி காட்டிவிட்டோம் என்ற மனத் திருப்தியுடன் குஸும் ஊருக்குச் சென்றாள்.

வாழ்வின் லட்சியத்தைப்பற்றிப் பார்வதிக்கு எதுவுமே தெரியாது. அடக்கமான கிராமத்துப் பெண் அவள். ஒரு புதிய ஒளி ஒன்றைக் கண்டுவிட்டோம் என்பது மட்டும் தான் இப்போது அவளுக்குத் தெரிந்தது. முன்பு அவள் ஏறெடுத்தும் பார்க்காமல் இருந்த எழுத்துக்களைப் படிப்ப தால் ஏற்பட்ட மகிழ்ச்சிதான் அந்த ஒளி. குஸும் சொன்ன படியே அவள் நடந்து வந்தாள். அவள் கொடுத்து விட்டுப் போன இரண்டு புத்தகங்களையும் படித்ததுடன் நில்லாமல் கண்ணில் பட்ட அச்சிட்ட காகிதங்கள் எல்லாவற்றையும் சேகரிக்கவும் தொடங்கினாள். இதற்குள் இது போன்ற காகிதங்கள் அவளிடம் நிறைய சேர்ந்துவிட்டன. அவற்றைப் பத்திரமாக சுத்தமான துணியினால் கட்டிப் பாதுகாத்து வைத்திருந்தாள்.

அவளுடைய தந்தை ராம்ஜி அவள் செய்கையை வியப்புடனும் ஆர்வத்துடனும் கவனித்து வந்தார். ஒரு புத்தகத்தைப் படிக்கக்கூடிய அளவுக்குப் பார்வதியை பெரிய அறிவாளியாக ஆக்கிவிட்டது குறித்து அவர் பெருமையடைந்தார். ஆனல் நாளடைவில் இது மாறிவிட்டது. பார்வதி காகிதங்களைத் தேடிக்கொண்டிருப்பதையும், குப்பைக் காகிதங்களை வீட்டில் குவித்து வைத்திருப்பதையும், மணிக்கணக்காக அத்துண்டுக் காகிதங்களைப் படிப்பதில் செலவிடுவதையும் கண்டு அவரது பெருமை குலைந்துவிட்டது. தன் பெண்ணுக்கு ஏதேனும் மூளைக் கோளாறு ஏற்பட்டு விட்டதோ என்று சந்தேகப்படவும் தொடங்கிவிட்டார். பார்வதியைப் போன்ற ஒரு குடியானவப் பெண்ணுக்குப் படிப்பில் ஆர்வம் எதற்கு? கல்யாணம் செய்துகொண்டு குழந்தைகளைப் பெறவேண்டியதுதானே இவர்களுக்கு முக்கியம். ராம்ஜிக்கு தெரிந்த வரையில் கிராமத்துப் பெண்களெல்லாம் அதைத்தான் செய்து வந்திருக்கிருர்கள். எனவே அதுதான் சரியாக இருக்கவேண்டும். கிராமத்துப் பெண் படிக்கவாவது? 'சே! நம்முடைய பெண்ணுக்குப் புத்திக் கோளாறுதான்' என்று அவர் எண்ணினுர். பார்வதி இப்படி முட்டாள்தனமாக நடந்துகொள்வதைத் தடுக்க இரண்டொரு முறை முயன்ருர். ஆனல் பார்வதியோ அவருடைய புத்திமதியையோ, மிரட்டலையோ சற்றும் பொருட்படுத்தவில்லை. கடைசியில் ராம்ஜி தமது முயற்சியைக் கைவிட்டுவிட்டார். 'முட்டாள் பெண் எப்படியோ போகட்டும். இது அதிக காலம் நீடிக்காது. சீக்கிரமே கல்யாணமாகிப் புருஷன் வீட்டுக்குப் போய்விடுவாள். அதன் பின் இந்தப் பைத்தியம் தெளிந்துவிடும்' என்று அவர் கருதினுர்.

ஆம். அவளுக்கு விரைவில் திருமணம் நடக்கப் போகிறது. அருமையான புருஷனை அவளுக்கென நிச்சயித்திருந்தார் ராம்ஜி. லக்கு சவந்த்துடைய மகன் சிவராம்

தான் அவன். இன்னும் சில மாதங்களில் அவளுக்குக் கல்யாணம் ஆகிவிடும்.

காலக்ரமத்தில் திருமணம் நடந்து அவள் புருஷன் வீடு சென்றாள். ஆனால் ராம்ஜி எதிர்பார்த்த விளைவு இதன் மூலம் ஏற்படவில்லை. எல்லோருக்கும் திருப்தியளிக்கும் விதத்தில் பார்வதி வீட்டு வேலைகளையெல்லாம் செய்தாள். ஆனாலும் படிப்பதைவிட்டு விடவில்லை. அதற்கும் நேரம் ஒதுக்கினாள். அவளுடைய கணவன் சிவராம் அசல் பட்டிக்காட்டு விவசாயி. கட்டுமஸ்தான உடல் அமைப்பும் அன்புள்ளமும் கொண்டவன். ஆனால் ரசனையும் ஆர்வமும் இல்லாதவன். அவன் பள்ளிக்கூடம் போகவே இல்லை. எழுதப்படிக்கத் தெரிந்து கொள்ளாததால் அருமையான எதையும் இழந்து விட்டதாக அவன் எண்ணியதே இல்லை. ஒருவனுடைய வாழ்க்கைக்கும் இவைகளுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? மண்ணெண்ணெய் விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் ஒரு புத்தகத்தைப் படிப்பதில் மூழ்கியிருந்த பார்வதியை முதன் முதலில் பார்த்தபோது அவனுக்கு வியப்பாக இருந்தது. ஏன் இப்படி முட்டாள்தனமான காரியத்தைச் செய்கிறாள் என்று அவன் எண்ணினான். ஆனால் பார்வதி ஒன்றும் கெட்டவள் அல்ல என்று மனதின் மற்றொரு மூலையில் பட்டது. அவள் தனது வேலைகளை மிகவும் நன்றாகச் செய்தாள். வாழ்க்கைத் துணைவி என்ற முறையில் மிகவும் திருப்திகரமாகவும் நடந்து கொண்டாள். எனவே சிவராம் தன்னையே சமாதானப் படுத்திக்கொண்டான். 'முட்டாள் பெண் வேண்டுமானால் படித்து விட்டுப்போகட்டுமே அதனால் எனக்கு என்ன நஷ்டம்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்வான். அதன்பின் அவளுடைய விசித்திரமான படிக்கும் ஆசையை அவன் பொருட்படுத்துவது இல்லை.

ஒரு சமயம் அவன் அன்புடன் கேட்டான்: "உனக்கு நான் ஒரு பரிசு தர விரும்புகிறேன். ஒரு தங்க நகை என்று வைத்துக் கொள்ளேன். உனக்கு எது வேண்டும் சொல். நாளைக்கு நகரத்துக்குப் போகிறேன். உனக்காக என்ன வாங்கி வரவேண்டும் சொல்."

பார்வதி அவனைப்பார்த்தாள். லேசான ஒரு சிரிப்பு அவள் முகத்தில் படர்ந்தது. "எனக்கு என்ன வேண்டும் என்று சொன்னால் நிஜமாகவே வாங்கித் தருவீர்களா?" என்று கேட்டாள்.

"ஓ கட்டாயமாக. எனக்கு உன்னிடம் அன்பு இல்லையா? நீ எது கேட்டாலும் வாங்கித் தருவேன்."

"எனக்கு புதிதாக ஒரு புத்தகம் வேண்டும்" என்றாள் அவள்.

"புத்தகமா?" சிவராமுக்கு அவள் இப்படிக்கேட்டது பெரும் வேடிக்கையாக இருந்தது. கட கட வென்று வாய் விட்டுச்சிரித்தான். "எவ்வளவு பெரிய முட்டாள் நீ. புத்தகம் வேண்டுமாமே! அதை மூக்கில் போட்டுக்கொள்வாயா? காதிலே மாட்டிக்கொள்வாயா?"

ஏமாற்றத்தினால் பார்வதியின் முகம் கறுத்தது. முகத்தைச் சுளித்துக் கொண்டவளாக, "புத்தகம் வாங்க இஷ்டம் இல்லாவிட்டால் எனக்காக எதையுமே வாங்கிவர வேண்டாம். பின் ஏன் என்னைக் கேட்க வேண்டும்?" என்றாள்.

அவளுடைய மனதைப் புண்படுத்தி விட்டதை சிவராம் உணர்ந்தான். "புத்தகம் வாங்கி வருகிறேன். அழகான மூக்குத்தி ஒன்றும் வாங்கித்தரப் போகிறேன். நல்ல புத்தகமும் வாங்கித்தருகிறேன்" என்றான்.

நகரத்துக்குப் போய்க் கொண்டிருந்தபோது சிவராம் மனைவிக்கு வாக்களித்ததைப் பற்றி நினைத்துக்கொண்டே போனான். அதை நிறைவேற்றுவது சுலபமாக இருக்காது என்பதையும் அவன் உணர்ந்தான். அவனுடைய வாழ்

நாளில் அவன் புத்தகம் வாங்கியதே கிடையாது. நல்ல புத்தகம் என்ருல் என்ன? அதுபற்றி அவனுக்கு எதுவுமே தெரியாது. கடைத் தெருவில் ஒரு புத்தகக் கடை அவன் கண்ணில் பட்டால், அங்கு நல்ல புத்தகமாக தேர்ந்தெடுப்பது எப்படி? கடைக்காரன் சொல்வதை நம்பி வாங்குவதா, முன்னெரு சமயம் அவன் அருமையான பாக்கு வெட்டி என்று சொல்லிக் கடைக்காரன் கொடுத்ததை வாங்கிஞன். சில வாரங்களில் அது கூர் மழுங்கி விட்டது. வெண்ணெய் வெட்டக்கூட லாயக்கற்றதாகப் போய்விட்ட அதை வாங்கி ஏமாந்ததற்காக அவனை கிராமத்தில் எல்லோரும் முட்டாள் என்றழைத்தார்கள். புத்தகம் வாங்கும் விஷயத்திலும் ஏமாந்து போய் முட்டாள் பட்டம் கட்டிக் கொள்ளக்கூடாது என்று அவன் எண்ணிஞன். நல்ல சாமான்கள் விற்கும் கடைகள் இருப்பது போல் நல்ல புத்தகங்களை மட்டும் விற்கும் கடைகளும் இருக்கத்தான்வேண்டும். ஒரு சிறு குழந்தை வேண்டுமாஞலும் போய் நல்ல புத்தகம் வாங்கக்கூடிய கடை வைத்திருக்கும் நாணயமான வியாபாரி ஒருவர் இருக்கத்தான் வேண்டும். ஆஞல் அது இருக்குமிடத்தை எப்படிக்கண்டு பிடிப்பது? இவ்விஷயத்தில் யாருடைய யோசனையைக் கேட்பது...?

இதே சிந்தனையில் சிவராம் தன் வண்டியை மூன்று மைல் தூரம் ஓட்டி வந்து விட்டான். திடீரென்று ஒரு யோசனை அவனுக்கு ஏற்பட்டது.

'கோகலே வாத்தியார்' நினைவு அவனுக்கு வந்தது. உண்மையிலேயே அவர் வாத்தியார்தாஞ என்பது அவனுக்குத் தெரியாது. எல்லோரும் அவரை கோகலே வாத்தியார் என்று அழைப்பது அவனுக்குத் தெரியும். யோசனை கேட்பதற்கு இவர்தான் சரியான ஆள். இவரிடம் போய்விட்டால் போதும்; பிரச்னையைத் தீர்த்து விடுவார் என்று எண்ணிஞன்.

சாட்டையைச் சுண்டிவிட்டு தலைக்கயிற்றை இழுத்துப் பிடித்தான். அவனுடைய அருமைக் காளைகள் குதிரைகளைப் போல் வேகமாக ஓடத் தொடங்கின. நகருக்குள் நுழைந்ததும் சிவராம் நேராக கோகலே வாத்தியார் வீட்டுக்குத்தான் சென்றான். அவரைச் சந்தித்து தன் மனைவியுடைய விசித்திரமான ஆசையையும் நல்ல புத்தகமாக ஒன்றை வாங்கி வரும்படி கேட்டதையும் கூறினான்.

கோகலே வாத்தியார் அக்கறையுடனும் மகிழ்ச்சியுடனும் அவன் சொன்னதைக் கேட்டார். "உன் மனைவியைக் குறித்து நீ பெருமைப்பட வேண்டும்" என்றார். சிவராம் பேசாமல் இருந்தான். பார்வதியைக் குறித்து அவன் பெருமைப்படவில்லையா என்ன? நிச்சயமாக அவனுக்குப் பெருமைதான். வீட்டை நன்றாக வைத்துக்கொண்டாள். சிவராமுடைய பெற்றோர்களுக்குப் பணிவுடன் சேவை செய்தாள். சிறிதும் முணுமுணுக்காமல் தன் பருவ உடலை அவனுக்களித்தாள். அதெல்லாம் சரிதான். அதற்காக அவளைக் குறித்து அவனுக்குப் பெருமைதான். அதற்கு மேல் அவளைப் பற்றிப் பெருமைப்பட முடியவில்லை. அவளுடைய புத்தக ஆசையை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதை ஒரு குறையாக அவன் கருதியபோதிலும் அதற்காக மன்னித்துவிடத் தயாராகி விட்டான். அவளை அவன் விரும்பியதாலும் அவளிடம் அன்புகாட்ட விரும்பியதாலும் தான் அவள் கேட்டபடி நல்ல புத்தகமாக வாங்கித்தர தீர்மானித்தான். இதையெல்லாம் வாய்விட்டுச் சொல்ல அவனுக்குத் தெரியாத போதிலும் மனதில் இந்த எண்ணங்கள் அலைபாய, ஊமை விலங்கைப்போல் கோகலே வாத்தியாரையே பார்த்துக்கொண்டிருந்தான்.

எது நல்ல புத்தகம் என்று கோகலே வாத்தியார் யோசித்துக் கொண்டிருந்தார். பல புத்தகங்களை அவர் நினைவுபடுத்திப் பார்த்தும் அவற்றுள் எதுவும் அவருக்குத்

திருப்தியளிக்கவில்லை. முகத்தைச் சுளித்தவாறே முணு முணுத்தார். சட்டென்று அவர் முகம் மலர்ந்தது. "ஆ! அதுதான் சரியான புத்தகம். உன் மனைவி படிப்பதற்கு ஏற்றது. அதை அவள் படிக்கவேண்டும். மதம், ஒழுக்கம், பண்பாடு, நல்ல வாழ்க்கை முறை பற்றி ஒருவர் தெரிந்து கொள்ள வேண்டியதையெல்லாம் அவள் அறிந்து கொள் வாள். பெருமைக்குரிய நமது முன்னோர்கள் வகுத்த வாழ்க்கை நெறியை புரிந்துகொள்ளவும் பின்பற்றி நடக்க வும் விரும்பினால் இந்தப் புத்தகத்தைத்தான் படிக்க வேண் டும் என்பதை அறிஞர்களும் மேதாவிகளும் ஒப்புக்கொள் வார்கள். போய் அந்தப் புத்தகத்தை வாங்கு. நான் சொல் வது கேட்கிறதா? அதுதான் உன் மனைவிக்கு வேண்டிய புத்தகம். அதை வாங்கிக் கொடு'' என்றார்.

"அது சரி. நீங்கள் புத்தகத்தின் பெயரைச் சொல்லவே இல்லையே'' என்று சிவராம் கேட்டான்.

"ஓ...அதைச் சொல்லவில்லையா? மகாபாரதக் கதை கள் என்பது அதன் பெயர்.''

"பார்வதி மிகவும் நல்ல புத்தகம் வேண்டும் என்றாள். நிஜமாகவே இது நல்ல புத்தகம்தானே?''

"நிச்சயமாக. இதைவிட சிறந்த புத்தகம் வேறு எது வும் கிடையாது. கடைக்குப் போய் மகாபாரதக் கதைகள் வேண்டுமென்று கேள்.''

"கடைக்காரர் நான் கேட்கும் புத்தகத்தையே தரு வாரா? வேறு எதையாவது கொடுத்து ஏமாற்றிவிடாமல் நான் எப்படித் தெரிந்துகொள்வது?''

கோகலே வாத்தியார் சிரித்தார். "கவலைப்படாதே! கேட்ட புத்தகத்தையேதான் தருவார்'' என்றார்.

சிவராம் கடைக்கு விரைந்து சென்று புத்தகத்தை வாங்கினான். அட்டைப் படத்தைப் பார்த்ததுமே அது நல்ல புத்தகம்தான் என்று அவனுக்குத் திருப்தி ஏற்பட்டு

விட்டது. வில்லேந்தி நிற்கும் விஜயனின் படம் அட்டையை அலங்கரித்தது. படம் அழகாக இருந்தது. எனவே புத்தகமும் நன்ருகத்தான் இருக்கவேண்டும். இதைப் பார்த்ததும் பார்வதி மிகவும் சந்தோஷப்படுவாள்...மகிழ்ச்சி அளிக்கும் இத்தகைய எண்ணங்கள் மனத்திரையில் நிழலாட சிவராம் விரைவாக வண்டியைச் செலுத்தினுன்.

அந்தப் புத்தகம் பார்வதியை மிகக் கவர்ந்தது. தனியாக இருக்கும்போது ஒரு நிமிடம்கூட புத்தகத்தைக் கீழே வைக்கமாட்டாள். மிகவும் எளிய நடையில் அது எழுதப்பட்டிருந்தது. எப்போதாவது இரண்டொரு வார்த்தைகள் புரியாமல் தடுமாறிய போதிலும் ஒவ்வொரு கதையையும் பொதுவாக அவளால் புரிந்துகொள்ள முடிந்தது. வளமான கற்பனையுடன் புனையப்பட்ட அந்தக் காவியக் கதையை முதலில் சுவாரஸ்யமான ஒரு கதையைப் படிப்பது போலத்தான் அவள் படித்தாள். ஆனுல் அதையே திரும்பவும் படிக்கத் தொடங்கியபோது அவற்றில் கதைக்கான சம்பவங்கள் மட்டுமின்றி வேறு பல விஷயங்களும் புலப்படுவதைக் கண்டாள். புராதன காலத்தில் இருந்த சமூக நிலையையும், காதலையும், வீரத்தையும் பெண்களுடைய அந்தஸ்தையும், கௌரவத்தையும் அவர்கள் நடையுடை பாவனைகளையும், அவர்கள் அனுபவித்த உரிமைகளையும், பொதுவாழ்வில் அவர்கள் கொண்டிருந்த பங்கையும் அவை புலப்படுத்தின.

பார்வதி இவற்றையெல்லாம் படித்தாள். தன்னுடைய நிலையை, அவர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கத் தொடங்கினுள். மகாபாரதக் கதாநாயகிகள் தங்கள் கணவன்மாரைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். பெற்ருேர்கள் பார்த்து யாருக்கும் மணம் செய்து வைக்கவில்லை. தாங்கள் காதலித்த வீரர்களை மணந்துகொள்வதற்காகத் தந்திரமாகவும் துணிகரமாகவும் பல காரியங்களை அவர்கள் செய்திருக்கிருர்கள். கடவுள் அவர்களுக்கு உதவி செய்திருக்கிருர்.

மக்கள் அவர்களைப் பாராட்டியிருக்கிறார்கள். இந்தப் பெண்களைப் பற்றிய கதைகள் அவளுடைய மனதைப் பெரிதும் கிளறிவிட்டன. மணவாழ்வில் அவர்கள் பெற்ற இன்பத்தைப் பற்றிய எண்ணம் அவள் உடலைப் புல்லரிக்கச் செய்தது. அந்தப் பெண்களுடைய அழகு, காதல், களியாட்டம் பற்றிய வர்ணனைகளைத் திரும்பத் திரும்ப தாபத்துடன் படித்தாள். படிக்கும்போதே திடீரென்று நிறுத்திவிடுவாள். புத்தகத்தில் கூறப்பட்டிருந்த உன்னதமான வாழ்க்கையிலிருந்து தன்னுடைய உண்மையான வாழ்க்கை நிலைக்கு வருவாள்.

தன்னுடைய மணவாழ்வைப் பற்றி அவள் எண்ணினாள். சந்தேகமும் அதிருப்தியும் அவள் இதயத்தை வாட்டியெடுக்கும். சிவராம் அவளுடைய கணவன். ஆனால் இதற்கு உண்மையான அர்த்தம் என்ன? தன்னுடைய கணவன் என்று அழைத்துக்கொள்ள அவனுக்கு என்ன உரிமை இருக்கிறது? அவள் அவனைக் காதலித்து வரித்தாளா? அவனை விரும்புகிறாயா என்று தந்தையாவது கேட்டாரா? லக்கு சவந்த்துக்கு ஒரு மகன் இருந்தான். அவளுடைய தந்தைக்கு ஒரு மகள் இருந்தாள். ஒருவருக்கு மருமகள் தேவைப்பட்டது. மற்றவர் மருமகனைத் தேடிக்கொண்டிருந்தார். அவளை சிவராமுக்கு மணம் செய்து வைத்ததற்கு அது ஒன்றுதான் காரணம்...அது ஏன் இப்படி நடக்க வேண்டும்? இவ்வாறு எப்படி ஏற்பட முடியும்? அவள் படித்த புத்தகத்தில் கூறப்பட்டிருந்த விஷயங்கள் உண்மையானவைதாம்...நிஜமாகவே நடந்த சம்பவங்கள் அவை. இதே நாட்டில் நடந்தவை. இந்தக் கதைகளை கோயில்களில்உபன்யாசகர்கள், பக்தியுடனும் பரவசத்துடனும் கேட்கும் ஆயிரக்கணக்கான பேர்களுக்கு சொல்லிக்கொண்டு வருகிறார்கள். மகாபாரதத்தில் வரும் ஆண்களும் பெண்களும் செய்த காரியங்கள் ஒழுக்கத்துக்கும், நல்ல

நடத்தைக்கும் எடுத்துக்காட்டு என்று ஒவ்வொருவரும் நம்புகிறார்கள்.

சிவராமுக்கு அவளை மணம் செய்து கொடுத்த போது ஒருவராவது அவளுடைய விருப்பம் என்னவென்று கேட்க வில்லையே! தற்குறியும் முட்டாளும் முரடனும் முண்டனுமான சிவராம் திடீரென்று ஒருநாள் அவளுடைய கணவனாகி விட்டான். ஆட்சேபித்து ஒரு வார்த்தை கூட சொல்லாமல் தன்னை அவனுக்கு கொடுக்க அவள் அனுமதித்து விட்டாள்.

இப்போது அவளுடைய மனம் புரட்சி செய்தது. சிவராமை தனது கணவனாக ஏற்றுக்கொள்வதும் அதற்கேற்ப நடந்து கொள்வதும் வரவர அவளுக்கு கஷ்டமாக இருந்தது. வெளிப்பட அவள் எதுவும் நடவாதது போல் காணப் பட்டாள். புன்சிரிப்புடன் தன் அன்றாட வேலைகளையெல்லாம் கவனித்து வந்தாள். கணவன் என்ற முறையில் அவனுக்கு உரிமையானதையெல்லாம் எடுத்துக் கொள்ளவும் அனுமதித்தாள். ஆனால் இவற்றைச் செய்யும்போது இதயம் வேதனையால் துடிக்கும். மனம் கொதித்துக் குமுறும். வெறுப்பும் வேதனையும் அவளை முழுமையாக ஆட்கொண்டன.

அமைதியும் ஆறுதலும் பெறுவதற்காக அவள் மகாபாரதக் கதைகளை மீண்டும் படிக்கத் தொடங்குவாள். அழகான பெண்களை மணந்த ஆண்களைப்பற்றியும்கவர்ச்சியான வீரர்களிடம் மனதைப் பறிகொடுத்த பெண்களைப்பற்றியும் படிப்பாள். பெண்கள் வெட்கப் பட்டுக்கொண்டு தங்கள் காதலை மூடி மறைக்கவில்லை. அதைப்பற்றி மனம் விட்டுப் பேசினார்கள். அவ்வாறு செய்ததற்காக யாரும் அவர்களைக் குறை கூறவில்லை. மணந்து கொள்ளும் கணவனை ஒரு பெண் விரும்ப வேண்டும் என்பது அங்கீகரிக்கப்பட்ட விஷயமாக இருந்தது.

பெருமைமிக்க அந்தப் பழங்காலத்துக் கதைகளில் மனதைப் பறி கொடுத்தவளாகப் பார்வதி புத்தகத்தை மேலும் மேலும் படிப்பாள். தானே அந்தக் காலத்துக்குப் போய் விட்டது போல் அவள் உணர்வாள். ஒரு விசித்திரமான ஆனந்த அனுபவமும் மன நிறைவும் அவளுக்கு ஏற்படும். திடீரென்று கற்பனையுலகிலிருந்து விடுபட்டு சுய உணர்வுக்கு வருவாள். அப்படியானால் மகாபாரதக் கதைகளுக்கு அர்த்தமே கிடையாதா? சும்மா படித்துவிட்டுப் பின்னர் மறந்து விடுவதற்குத்தானா இந்தக் கதைகள் இருக்கின்றன? மகாபாரதத்தில் வரும் பெண்களுக்கும் தனக்கும் எவ்வளவு வேறுபாடு?

அறையின் மூலையில் கிடக்கும் படுக்கையின் பக்கம் அவள் பார்வை திரும்பும். மண்ணெண்ணெய் விளக்கின் மங்கிய ஒளியில் சிவராமுடைய அருவருப்பான உருவம் கண்ணில் படும். குளிர் காற்று வீசும். சிவராம் போர்வையை இழுத்துப் போர்த்துக் கொண்டு புரண்டு படுத்து எருதைப் போல் உறுமுவான். பார்வதியின் உடல் நடுங்கும். முகத்தைத் திருப்பிக்கொண்டு தேம்புவாள். அவள் இதயத்தை அரித்துக்கொண்டிருந்த அதிருப்திப் புயலை அடக்க வழியறியாமல் தவிப்பாள்.

புத்தகத்தைத் தூக்கி எறிந்து விட்டு மாட்டுக் கொட்டகைக்கு ஓடிப்போய் அதை சுத்தம் செய்யத்தொடங்குவாள். சத்தம் சிவராமுடைய தந்தையை எழுப்பி விடும். "யாரது?" என்று கேட்பார் கிழவர்.

"நான் தான்" என்று பதிலளிப்பாள் பார்வதி.

"கோழி கூவி விட்டதா என்ன? பொழுது விடிந்து விட்டதா?"

"இல்லை. நீங்கள் தூங்குங்கள்."

பார்வதியின் உள்ளம் ஒரு போர்க் களமாகி விட்டது. ஆசையைப் பயம் எதிர்த்துப் போராடியது. கால

காலமாக நிலைத்து விட்ட வழக்கம் புதிதாக ஏற்பட்ட புரட்சிகரமான உணர்வை எதிர்த்துப் போராடியது. தன்னுடைய பயனற்ற வாழ்க்கையைக் குறித்து அவளுடைய மனம் இடிந்து போய் விட்டது. அதற்கு முடிவு காணும் எண்ணமும் அவளுக்கு ஏற்படலாயிற்று. உள்ளத்தில் இத்தைய மாறுதல்கள் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்த அந்தப் புத்தகத்தைப் பற்றிய அவளுடைய கருத்து கவர்ச்சியும், பயமும் சேர்ந்த ஒரு விசித்திரக் கலவையாக இருந்தது. அடிக்கடி அந்தப் புத்தகத்தைப் படித்து அதில் விவரிக்கப் பட்டுள்ள அற்புத உலகில் நடமாட வேண்டும் என்ற ஆசை அவளுக்கு ஏற்படும்; அதே நேரத்தில் அதன் விளைவுகளைக் குறித்தும் அவள் பீதியடைந்தாள். முதலில் புத்த தகத்தைப் படிப்பது அவளுக்கு ஆனந்தமளிப்பதாக இருந்தது. மெல்ல மெல்ல அது அவளுடைய கண்களைத்திறந்து விட்டது. அதன் பின்னர் அவள் தன்னுடைய இழிவான நிலையை மறந்திருப்பதற்காகப் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினாள். சக்தி வாய்ந்த மருந்தைப் போல் இப்போது அது ஆகிவிட்டது. அதன் மீது அவளுக்கு ஆசையும் ஏற்பட்டது. அதே நேரத்தில் பயமும் எழுந்தது. தன் ஆசையை எதிர்த்து அவள் போராடினாள். ஏனெனில் அதன் மூலம் ஏற்பட்ட விழிப்பு தன்னை அழிவுக்கேஅழைத்துச் செல்லும் என்பதை அவள் புரிந்து கொண்டிருந்தாள். ஒவ்வொரு நாள் இரவிலும் சிவராமுடைய அணைப்பில் இருக்கும்போது, தன் உடலே பற்றியெரிவது போல் அவள் உணர்ந்தாள். இன்பக் கிளர்ச்சி ஏற்பட வேண்டிய தருணத்தில் துன்பவேதனை ஏற்படுவதற்குக் காரணமாக இருப்பது அந்தப் புத்தகம் தான் என்பது அவளுக்குத் தெரியும். அந்தப் புத்தகத்தைப் படிக்காமலே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்ற எண்ணம் அடிக்கடி ஏற்படும்.

அப்படி இருந்தால் சிவராமை மணந்து கொண்ட அப் பாவியும், குருடியும் முட்டாளுமான பார்வதி கிடைத்ததை கொண்டு திருப்தியடைந்து தன் காலத்தை ஓட்டியிருப்பாள். ஆனால் இப்போது அவள் குருடியல்ல. உறங்கிக்கிடந்த அவளுடைய உள்ளம் உணர்வு பெற்று எழுந்து விட்டது. அவளால் இப்போது சிந்தித்துப் பார்க்க முடியும். நல்லது எது கெட்டது எது என்று அவளால் தீர்மானித்து சொல்ல முடியும்; நியாய அநியாயத்தைப் பாகுபடுத்திக் கூற முடியும். இதில்தான் உண்மையான அபாயம் இருந்தது. சிவராமைத் தன்னுடைய கணவனாக ஏற்றுக் கொள்வது அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. அவனுடைய ஸ்பரிசம் அவளுக்கு இன்ப மூட்டுவதற்குப் பதிலாக வெறுப்பையும் கோபத்தையும் ஏற்படுத்தியது. அவளுடைய உள்ளம் விரக்தியால் விறைத்துப் போய்விட்டது. உடலோ இழி நிலையிலிருந்து விடுபடத் துடித்தது.

சிவராம் ஒரு அப்பாவி. ஆயினும் அவனும்கூட பார்வதியின் போக்கில் ஏற்பட்ட மாறுதலை உணரமுடிந்தது. சட்டபூர்வமாகத் தன்னுடையவளாகி விட்ட இந்தப் பெண்ணின் உடலிலிருந்து தனக்கு வேண்டிய இன்பத்தைத் தானாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். அவளாக விரும்பித் தருவதோ, அல்லது ஒத்துழைப்பதோ இராது என்பதை அவன் புரிந்து கொண்டான். இதன் காரணமாக அடிபட்ட விலங்கைப்போல் மூர்க்கம் அடைந்தான். அவனுடைய ஆத்திரம் பார்வதியின் இதயத் துடிப்பை மேலும் அதிகரித்தது. கூண்டிலிருந்து விடுபடத் துடிக்கும் பறவையின் நிலையை அவள் அடைந்தாள்.

தற்செயலாக அது நேர்ந்தது. ஒரு நாள் மத்தியானம் கிணற்றுக்கு நீர் எடுத்து வரச் சென்ற போது அவள் ஓர் இளைஞனைச் சந்தித்தாள். அவனை அவள் அதற்கு முன்பு பார்த்ததே இல்லை. அவன் யார், எந்த ஊரைச் சேர்ந்த

வன், கிராமத்தில் என்ன வேலையாக வந்தான் என்பதெல்லாம் அவளுக்குத் தெரியாது. அவன் முற்றிலும் புதியவன். ஆயினும் அவனைக் கண்டவுடனே தன் இதயத்தில் ஏதோ ஒரு உணர்வு ஏற்பட்டதை அனுபவித்தாள். மகா பாரதக் கதைகளில் வர்ணிக்கப் பட்டுள்ள காதலர்களின் நினைவெல்லாம் திடீரென்று அவளுக்கு ஏற்பட்டது. தன் முன்னே நிற்கும் இவனைப் போன்ற ஒருவனை மாதிரியாக வைத்துக் கொண்டுதான் கவிஞர்கள் அக் கதைகளை எழுதியிருக்க வேண்டும், என்று அவள் எண்ணினாள். தான் வந்த வேலையை மறந்து ஒரு மரத்தின் பின்னால் நின்று கொண்டு அந்த அழகிய ஆண் உருவத்தைக் கண்டு களித்தாள். அவன் அப்பால் போனதும்தான் அவளுக்கு சுயவுணர்வு வந்தது. வந்தது போலவே திடீரென்று அவன் பார்வையிலிருந்து மறைந்து விட்டான். ஆயினும் அன்று முழுவதும் மறக்க முடியாத அவனுடைய உருவம் அவளுடைய கண்களில் நிறைந்து நின்றது.

இரவு வந்தது. சிவராமுடைய கிழத் தந்தை வயலிலிருந்து திரும்பி வந்தார். சற்று நேரத்துக்குப் பின் சிவராமுடைய குரலைப் பார்வதி கேட்டாள். அவனும் வீடு திரும்பி விட்டான். ஆம். அவளுடைய கணவன்! சுவற்றோடு சாய்ந்து கொண்டு அவள் தன் கண்களை மூடிக் கொண்டாள். இருதயம் வேகமாகத் துடித்தது. படபடவென்று அது துடிக்கும் ஒலியை அவளால் கேட்க முடிந்தது.

சில மணி நேரம் கழித்துத் தூங்கப் போகும் நேரம் வந்ததும் அவளுடைய உடல் முழுவதும் நடுங்கியது. கால்கள் கழன்று விழுந்து விடுவதுபோல இருந்தன. அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டாள். உடனே மயங்கித் தரையில் சாய்ந்து விட்டாள். ஒரு கணம் தான் அவள் அப்படிப் படுத்திருந்திருப்பாள். யாரோ நெருங்கி வரும்

காலடி யோசையைக் கேட்டாள். அது சிவராம் தான் என்பது அவளுக்குத் தெரியும். சுருட்டி வாரிக் கொண்டு அவள் எழுந்தாள். மரணத்திலிருந்து தப்பி ஓட விரும்பு கிறவளைப் போல வேகமாக கதவை நோக்கிச் சென்ருள். ஆனுல் சிவராம் அவளைப் பற்றியிழுத்தான். அவளுடைய உள்ளம் ஓலமிட்டது; உடல் இணங்க மறுத்து முரண்டு செய்தது. சிவராம் தன்னையே மறந்து விட்டான். ஒரு மிருகத்தை அடிப்பது போல் அவளை அடித்தான். அந்த அடி தாங்காமல் பார்வதி உணர்விழந்து சாய்ந்தாள்.

உணர்வு வந்தபோது குளிர்ந்த காற்றின் ஸ்பரிசத்தை அனுபவித்தாள். விடியற்காலை நேரமாக இருக்கவேண்டும் என்று அவள் யூகித்தாள். அறையில் இருள் மூடியிருந்தது. மெல்ல மெல்ல நடந்ததையெல்லாம் நினைவு படுத்திக் கொண்டாள். இருட்டை வெறித்துப் பார்த்தவாறே அசையாமல் சற்று நேரம் கிடந்தாள். அவளுடைய மனதில் எவ்வித சிந்தனையும் இல்லை. மயக்க மருந்திஞல் உணர் விழந்து போன நிலையில் அது இருந்தது.

ஆயினும் அடிபட்ட பறவை நினைவு பெற்று சுவாசிக் கத் தொடங்கி தன் இறகை அசைப்பது போல் சற்று நேரத்துக்குப் பின் அவளுடைய மனச் சக்கரம் சுழலத் தொடங்கியது. நெருங்கி வரும் காலடியோசை வரவரத் தெளிவாகக் கேட்பது போல் தன் உள்ளக் குரலை அவள் வரவரத் தெளிவாகவும் விரைவாகவும் கேட்கத் தொடங்கி ஞள். வெகு நேரம் வரை அந்தக் குரலைக் கேட்டவாறே அசைவற்றுப் படுத்திருந்தாள்.

கடைசியில் அவள் எழுந்தபோது மனதில் ஒரு முடி வுக்கு வந்து விட்டதைப் போல அவள் தோன்றிஞள். எழுந்து அவள் அறையின் மூலைக்குச் சென்ருள். தீக்குச்சி யைக் கிழித்து மண்ணெண்ணெய் விளக்கை ஏற்றிஞள்.

தானிய மூட்டை மீது கிடந்த 'மகா பாரதக் கதைகள்' புத்தகத்தை எடுத்தாள். அதன் அட்டையை அப்புறப் படுத்தி விட்டு சில பக்கங்களைக் கிழித்தாள். விளக்கின் ஜுவாலைக்கு நேரே பிடித்தாள். அதன் பின் மேலும் சில பக்கங்களைக் கிழித்துக் கொளுத்தினாள். மேலும் மேலும் கிழித்து அவள் கொளுத்திக் கொண்டே போனாள்......

புத்தகம் முழுவதையும் கொளுத்தி எரித்ததும் அவள் விளக்கை ஊதி அணைத்தாள். புத்தகம் படிப்பதற்காக இனி அதை அவள் ஏற்றவே மாட்டாள். அந்தப் புத்த கத்திலிருந்து குடித்த அறிவு விஷத்தை அவள் கக்கி விட்டாள். புத்தகம் அவளுக்கு காணக் கண்களைக் கொடுத் தது. அந்த விழிகளை இப்போது அவள் பிடுங்கி எறிந்து விட்டாள். மீண்டும் அவள் குருடியாகி விட்டாள். அறைக்குள் பழையபடி அந்தகாரம் சூழ்ந்தது. ஆழ்ந்த இருளில் சுவற்றில் சாய்ந்தபடி அவள் கண்களை மூடிக் கொண்டாள்.

மாட்டுக் கொட்டகையில் மாடுகள் உரக்க மூச்சு விடும் ஒலியும், அசை போடும் சத்தமும் கேட்டது. பார்வதியினால் அதைக் கேட்க முடிந்தது. இந்த மாடுகளுடைய வாழ்க்கை யிலிருந்து அவளுடைய வாழ்க்கை வேறு பட்டதல்ல என் றவள் எண்ணினாள். மாறாகவும் இருக்கக் கூடாதுதான். ஊமை விலங்கைப் போன்று வாழப் பிறந்தவள் அவள். அதை அவள் புரிந்து கொள்ள வேண்டும். கழுத்தில் கட்டிய தாலியை அறுத்தெறிய முயற்சிப்பதில் பயன் இல்லை.

காலையில் சிவராம் விழித்தெழுந்த போது தானிய மூட்டையருகே சிறு சாம்பல் குவியலையும், கனமான புத்தக அட்டையையும் கண்டான். அட்டையில் வில் ஏந் திய விஜயனின் படம் இருந்தது. அதை அவன் வெகு நேரம் பார்த்தான். பார்வதிக்கு தான் வாங்கி வந்த புத்த

கம் அது என்பது நினைவுக்கு வந்தது. அதைப் பரிசாகப் பார்வதிக்குக் கொடுத்ததில் அவன் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தான். அவளும் அதை விரும்பி தன் கையிலேயே வைத்திருப்பதைப் பலமுறை பார்த்து இருக்கிறான். அதே புத்தகம் இப்போது...

சிவராமுக்கு ஒரே குழப்பம். எதுவுமே அவனுக்குப் புரியவில்லை.

பிறகு அவன் ஒரு துடைப்பத்தை எடுத்துப் பெருக்கி சாம்பலையும், புத்தக அட்டையையும் ஒரு மூலையில் குவித்தான்.

# அன்பு உள்ளம்

ரயிலைப் பிடிப்பதற்காக ஓடிக்கொண்டிருந்தேன். 'சியாம் ! சியாம் !' என்று யாரோ கை தட்டிக் கூப்பிடுவது கேட்டது. ஓட்டத்தை நிறுத்தி விட்டு வலப்புறம் திரும்பி னேன். இரண்டு வாலிபர்கள் என்னை நோக்கி ஓடி வந்தார் கள். "நல்ல வேளை. உன்னைப் பார்த்தோம், உன் வீட்டு விலாசத்தை எப்படிக் கண்டு பிடிப்பது என்று தவித்துக் கொண்டிருந்தோம்" என்று கூறிய அவர்கள் இருவரும் என் கைகளைப் பிடித்துக் கொண்டார்கள். நானும் சிரித்த வாறே கை குலுக்கினேன். "இங்கே என்ன செய்கிறீர்கள்? உங்களை சந்திப்பேன் என்று நினைக்கக் கூட இல்லையே !" என்றேன்.

"பிரயாணக் கட்டணச் சலுகை வழங்கப் படும் சமயம் அல்லவா இது ?" என்றான் பாலு. இந்த சமயத்தில் எப் போது யார், யாரை எங்கே சந்திப்பார்கள் என்று சொல்ல முடியுமா ? தெற்கே யுள்ளவர்கள் வட நாட்டுக்கு வரு கிறார்கள் ; வட நாட்டிலுள்ளவர்கள் தெற்கே போகிறார் கள். வேலை இருக்கிறதோ இல்லையோ மனிதர்கள் எங்கா வது போவார்கள். 'கலை கலைக்காகவே' என்பது போல்

பிரயாணம் செய்வது பிரயாணத்துக்காகவே என்று கருதித் தான் கூட்டம் கூட்டமாகப் போகிருர்கள். நாங்கள் வந்ததும் இப்படித்தான். சலுகைக் கட்டண சுற்றுப் பிரயாண டிக்கட் வாங்கிக் கொண்டு ஊர் ஊராகப் போய்க் கொண்டிருக்கிறோம்.''

"எவ்வளவு அதிக அளவுக்கு முடியுமோ அவ்வளவுக்கு இந்த சுற்றுப் பிரயாண டிக்கட்டைப் பயன் படுத்துவது எங்கள் நோக்கம்'' என்ருன் ராஜா.

"பாராட்ட வேண்டிய விஷயம் தான்'' என்றேன்.

"நீயும் டிக்கட் வாங்கிக் கொண்டு டில்லிக்கோ ஹரித்வாருக்கோ, வட துருவத்துக்கோ ஏன் போகவில்லை'' என்று ராஜா கேட்டான்.

பதில் கூற அவகாசம் தராமலே பாலு சொன்னுன். "எவ்வளவு பெரிய முட்டாளப்பா நீ. இப்போது தானே கல்யாணமாகி அவன் குடித்தனம் வைத்திருக்கிருன். தம்பதிகள் இப்போது இடை விடாத இன்பத்தில் அல்லவா திளைப்பார்கள்? உன்னையும் என்னையும் போன்ற கல்யாணமாகாத நாடோடிகளுக்குத் தான் சுற்றுப் பிரயாண டிக்கட்டை வாங்கிக்கொண்டு ஊர் சுற்றுவதிலே உற்சாகம் இருக்க முடியும். சியாம் இன்னும் தேன்நிலவை யல்லவா அனுபவித்துக் கொண்டிருப்பான். சுற்றுப் பிரயாண டிக்கட்டைப்பற்றி அவனுக்கு என்ன கவலை? என்ன சியாம் நான் சொல்வது சரிதானே?''

"நீ சொன்னது பாதி சரி; பாதி தவறு'' என்றேன் புன்னகையுடன். "என் மனைவியுடன் இன்பமாக வாழ்ந்து கொண்டிருப்பதால் எனக்கு எந்த இடத்துக்கும் போக விருப்பம் கிடையாது என்பது உண்மைதான். ஆனுல் மற்ருெரு முக்கியமான விஷயம் எனக்கு ஆபீசில் லீவு கிடைக்காது என்பதாகும். இன்று சனிக்கிழமை. அரைநாள் வேலை இல்லையா? ஆனுல் முதலாளி இரவு எட்டுமணிவரை வேலை

செய்யச் சொன்னார். திடீரென்று ஒரு கற்பனை அத்தையை உருவாக்கி அவளுக்கு உடம்பு அபாயத்தில் இருப்பதாக சொன்னதின் பேரில் தான் என்னைப் போகவிட்டார்.''

"எங்களுடைய நல்லதிர்ஷ்டத்துக்குத்தான் நாங்கள் நன்றி சொல்ல வேண்டும். உன்னைச் சந்திக்க பெரிதும் விரும்பினோம். ஆனால் வேலை பார்க்கும் ஆபீஸ் விலாசமோ, அல்லது புதிய மனைவியைக் குடியேற்றியிருக்கும் வீட்டு விலாசமோ எங்களுக்குத் தெரியாது. உன்னைப்பார்க்காமல் குவாலியருக்குப் போக நேர்ந்திருந்தால் மிகவும் வருந்தி இருப்போம். ஆனால் இருக்கிற இடத்தையெல்லாம் விட்டு விட்டு இங்கே உன்னைச் சந்தித்தோம். அதுவும் நல்லது தான்.''

''எங்களுக்கு காப்பி கூட வாங்கித்தர மாட்டாயா?'' என்று கேட்டான் ராஜா.

''காப்பியா? அதற்கு மேல் எதுவும் வேண்டாமா? எத்தனையோ காலத்துக்குப் பிறகு என் அருமை நண்பர்களைச் சந்தித்திருக்கிறேன். ஓட்டலுக்குப் போய் ஒரு கப் காப்பி வாங்கிக் கொடுப்பது இந்த சந்தோஷகரமான சந்திப்புக்கு போதுமானதாக இருக்குமா? ஆனாலும் என்னைப்பற்றி நீ இவ்வளவு மட்டமாக நினைக்கக் கூடாது ராஜா!'' என்றேன்.

''மோசமான ஒரு ஓட்டலில் காப்பி வாங்கிக் கொடுப்பது அவனுக்கும் கௌரவமல்ல; அதைச்சாப்பிடுவது நமக்கும் பெருமையல்ல. நம்முடைய நீண்ட நாளைய நட்பின் பேரால் நம்மை அவன் வீட்டுக்கு அழைத்துப் போகச் சொல்ல வேண்டும். அவனுடைய மனைவியை நமக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டும். நல்ல விருந்து சாப்பிட்டு விட்டு இரண்டு மணிநேரமாவது சிரித்துப்பேசி சந்தோஷப் பட வேண்டும். என்ன சியாம் நான் சொல்வது சரிதானே?'' என்றான் பானு.

நானும் அவர்களை என் வீட்டுக்கு அழைத்துப் போகத் தான் விரும்பினேன். பாலு சொன்னது என்னுடைய ஆசையை மேலும் தூண்டியது. பல சந்தேகங்கள் காரண மாக உள்ளூர நான் மனம் கலங்கியது உண்மைதான். இந்த சமயத்தில் என்னுடைய மனைவி லலிதா வீட்டில் இருப் பாளா? அப்படியே வீட்டில் இருந்தாலும் எதிர்பாராமல் வந்து நிற்கும் இரண்டு விருந்தாளிகளை வரவேற்று உபசரிக்க விரும்புவாளா? இந்த சாப்பாட்டு ராமன்களுக்கு விருந்து தயார் செய்ய விருப்புடன் முன்வருவாளா? வெறுப்புடன் வருந்துவாளா? பாலுவும் ராஜாவும் என்னுடைய உயிர் நண்பர்கள். அவர்களைச் சந்தித்ததிலே நான் மிகவும் மகிழ்ச்சியடைந்திருந்தேன். மேலும் புதிதாக மணமான வர்கள் நண்பர்களுக்குத் தம் வீட்டையும், இன்ப வாழ்வை வையும் காட்ட விரும்புவார்களல்லவா? அதே ஆசை என்னை யும் பற்றிக்கொண்டது. என்னுடைய திருமணம் எல்லோ ருக்கும் நடப்பது போல் சகஜமான ஒன்றாக நடைபெற வில்லை என்ற காரணத்தால் என்னுடைய இந்த ஆசை மேலும் அதிகமாக இருந்தது. லலிதாவை மணந்து கொள் வதற்கு முன் நான் எத்தனையோ தடைகளைக் கடக்க வேண்டியிருந்தது. இந்தக் கல்யாணம் நான்கு மாதகாலம் கூட நீடிக்காது. ஒரு நடிகையை மனைவியாக அடைவதைப் போன்ற நரக அவஸ்தை வேறு எதுவும் இருக்கமுடியாது என்பதை சியாம் விரைவிலேயே தெரிந்து கொள்வான் என்று பலர் சொன்னார்கள்.

ஒருவன் காதலித்து மணந்து கொள்ளத் துணிந்தாலே போதும். எங்கிருந்தெல்லாமோ புத்திமதி கூறப் பலர் புறப்பட்டு வந்து விடுவார்கள். பிரதிபலன் கருதாமல் இலவச ஆலோசனை கூறத் தொடங்கி விடுவார்கள். இந்த நிலையை மேலும் மோசமாகச் செய்யும்படியாக லலிதா ஒரு நடிகையாக இருந்தாள். முன்னணியில் இருந்த நடிகை

அல்ல, உப பாத்திரங்களில் நடித்து வந்தவள். பெரிய பாத்திரமாக இருந்தால் என்ன சிறிய பாத்திரமாக இருந் தால் என்ன நடிகை நடிகை தானே? எனவே என்னைச் சுற்றி யிருந்தவர்களெல்லாம் தாராளமாகப் புத்திமதியை வழங்கத் தொடங்கி விட்டார்கள்.

“நீ என்னவோ அவளைக் காதலிப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். காதல் எல்லாம் சில நாட்களில் வறண்டு விடும். அவளும் உன்னைக் காதலிப்பதை விட்டு விடுவாள். சண்டையும் சச்சரவும் தான் மிஞ்சும். உனக் குத் தெரியாது. இந்த நடிகைகளுக்கு வேண்டியதெல்லாம் ஆடம்பரமும் தமாஷும் தான். தாராளமாகச் செலவு செய்து அவளைத் திருப்திப் படுத்தும் வரை அவள் சரியாக இருப்பாள். ஆனால் நீ ஒன்றும் பணக்காரன் அல்ல. அவ ளுடைய முட்டாள்தனமான ஆசைகளை எவ்வளவு காலத் துக்கு உன்னால் நிறைவேற்ற முடியும்? சொல்வதைக் கேள், நடிகையை மனைவியாகக் கொள்வதைப் போன்ற நரகம் வேறு கிடையாது” என்றெல்லாம் சொன்னார்கள்.

நான் உறுதியற்றவனாக இருந்திருந்தால் இந்தப் போத னைகளைக் கேட்டு என் உள்ளத்தில் முளை விட்டிருந்த காதல் அழிந்து மறைந்திருக்கும். ஆனால் நானும் லலிதா வும் உறுதியான அன்பினால் கட்டுண்டிருந்தோம். லலிதா வைப் போன்ற ஒரு பெண் இந்த உலகத்திலேயே இருக்க முடியாது என்பது எனது உறுதியான முடிவு. தன்னுடைய லட்சிய புருஷனாக என்னை அவள் கருதினாள். லலிதா நடிகை என்பதால் நான் அவளிடம் கொண்ட அன்புக்கு எந்தக் குறையும் ஏற்பட வில்லை. அவளுடைய எண்ணித்துணியும் இயல்பையும், பிறரை எடை போடுவதில் உள்ள திறமை யையும் அதற்கேற்ப நடந்து கொள்ளும் நடத்தையையும் நான் பெரிதும் விரும்பினேன். என்னிடமுள்ள நல்ல அம் சங்களில் பல அவளால் உண்டானதுதான் என்பதை அறிந்

ததும் எனக்கு அவளிடம் முன்னை விடஅதிகமான அளவுக்கு கவர்ச்சி உண்டாகி விட்டது. ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் தன்னைப் பற்றி மிகவும் உயர்வான அபிப்பிராயம் இருக்கிறது. இதனை முகஸ்துதி செய்கிறவர்களிடம் தான் ஒருவருக்குக் காதல் ஏற்படுகிறது. நானும் லலிதாவும் ஒருவரை யொருவர் போற்றுகிறவர்கள், எனவே நாங்கள் காதலில் மூழ்கினோம். என்னை அவள் அடிமைப்படுத்தி விட்டாள் என்பதை அறிந்ததும் நான் அவளுடைய அடிமையாகி விட்டேன்.

என்னை மணந்து கொள்ளுமாறு அவளைக் கேட்கப் போதுமான துணிவு வெகு நாட்களுக்கு எனக்கு ஏற்படவில்லை என்பது அதிசயமாகப் பட்டாலும் அது உண்மையேயாகும். என்னைப் பற்றி அவள் என்ன கருதுகிறாளென்பதையறியச் சுற்றி வளைத்து எல்லா வழிகளிலும் முயன்றேன். ஆயினும் அதுபற்றி என்னால் நிச்சயிக்க முடியவில்லை. நேரடியாகக் கேட்டுப் புயலை எழுப்ப என்னால் முடியவில்லை. லலிதாவை நினைத்துக்கொண்டு தனியே படுத்திருக்கும் போதெல்லாம் என்னை நானே கண்டித்துக்கொள்வேன். 'முட்டாள், எப்போதும் இப்படி சந்தேகத்திலேயே தான் உழன்றுகொண்டிருப்பாய். வேறுயாராவது துணிந்து வந்து லலிதாவைத் தட்டிக்கொண்டு போய்விடப்போகிறார்கள். அப்போது உன் துரதிர்ஷ்டத்தை நொந்து கொண்டு கதறுவதைத் தவிர உனக்கு வேறு வழி இருக்காது' என்று மனம் இடித்துரைக்கும். ஆயினும் இந்தத் தயக்கத்திலிருந்தும் சந்தேகத்திலிருந்தும் தப்புவதற்கான வழியெதையும் என்னால் காணமுடியவில்லை. அந்த சந்தர்ப்பம் வந்தபோது அப்படியே திகைத்துப் போனேன். லலிதா என்னுடையவளாகி விட்டாள் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. அவ்வளவு சட்டென்று அது நடந்துவிட்டது.

லலிதாவுக்கு எப்போதும் வேலை இருந்துகொண்டே இருக்கும். சாவதானமாக நாங்கள் சந்தித்துப் பேசுவது அபூர்வ நிகழ்ச்சியாகும். தன் சிநேகிதி ஒருத்தியுடன் அவள் ஓர் அறையில் வசித்து வந்தாள். எனவே அந்த அறைக்கு நான் போகும்போதெல்லாம் அந்த சிநேகிதியுடனும் அவளுடைய வயதான அத்தையிடமும்தான் பெரும் பகுதிப் பேச்சைப் பேசவேண்டியிருக்கும். லலிதாவிடம் இடையிடையே தொடர்பில்லாமல் இரண்டொரு வார்த்தைகளைத் தான் பேசமுடியும். லலிதா எப்போதாவதுதான் என்னுடைய அறைக்கு வருவாள். அப்படி வரும்போதும் சிநேகிதியைக் கூட அழைத்துக்கொண்டுதான் வருவாள். என்னுடைய காதலைப் பற்றிப் பேச எனக்கு வாய்ப்பே இல்லை. அந்த வாய்ப்புக் கிடைக்காததற்காக என்னுடைய கோபத்தைக் காட்டவும் முடியவில்லை. தர்மசங்கடத்தில் நான் தடுமாறிக் கொண்டிருந்தேன். எனக்குள்ள ஒரே வழி லலிதாவுக்குக் கடிதம் எழுதுவதுதான்.

திடீரென்று ஒருநாள் லலிதா என்னிடம் வந்தாள். அப்போது அவளை நான் எதிர்பார்க்கவே இல்லை.

நான் இன்னும் பல்துலக்கி முகம் கழுவக்கூட இல்லை. இரவில் அணிந்திருந்த பழைய உடையைக்கூட மாற்றிக் கொள்ளவில்லை. "என்ன ஆச்சரியம்! சூரியோதய நேரத்தில் சந்திரன் உதித்திருக்கிறதே!" என்றேன்.

அவள் சிரித்தாள்.

அவளை உள்ளே அழைத்து வந்து கதவைத் தாழிட்டேன். அவள் தனியே வந்ததில் எனக்குத் தாங்கமுடியாத மகிழ்ச்சி.

"நீங்கள் ஒரு கவிஞர் என்பது எனக்குத் தெரியவே தெரியாதே!" என்று கூறி அவள் செல்லமாக என் மார்பில் தட்டினாள்.

" லலிதா, ஒரு நிமிஷம் இங்கே இரு. நான் போய் முகம் கழுவிவிட்டு வருகிறேன். என்னைப் பார்த்தாலே ஆபாச மாக இருக்கும்" என்றேன்.

" ஆபாசமா? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

" அதாவது அசுத்தம்"

" அப்படியென்றால்..."

" உன் தலை...இரு இதோ வந்துவிடுகிறேன். ஐந்து நிமிஷத்துக்கு மேல் ஆகாது."

" முடியாது...முடியாது" என்ற அவள் என்னை தன் னருகே இழுத்துக் கொண்டாள்.

" இல்லை லலிதா! என்னை விடு. பல்கூட துலக்காமல் உன் அருகில் வரவே எனக்கு வெட்கமாக இருக்கிறது" என்று திமிறினேன்.

" என்னுடைய முகத்துக்கருகில் உங்கள் முகத்தை கொண்டுவரும்படி யார் கேட்டார்கள்" என்ற அவள் கல கலவென்று சிரித்தாள். "இப்படிப் பேசாமல் உட்காருங்கள். புதிய கம்பெனி ஒன்றுடன் ஒப்பந்தம் கையெழுத்திட வேண்டியிருக்கிறது. அதற்கு உங்கள் யோசனை தேவை. அதிக நேரம் இல்லை. நான் அவசரமாகப் போகவேண்டும்."

" ஐந்து நிமிஷத்துக்கு மேல் ஆக்கமாட்டேன். தயவு செய்து என்னை விடு."

" முடியாது. ஒவ்வொரு நிமிடமும் விலைமதிப்புள்ள தாகும். உட்காரத்தான் வேண்டும்" என்ற அவள் என் கையைப் பற்றி இழுத்தாள்.

" நான் அசிங்கமாக இருப்பது தெரியவில்லையா?"

" அசிங்கமா? யார் சொன்னது அப்படி?"

மேஜை மீதிருந்த நிலைக்கண்ணாடியில் என் முகத்தைப் பார்க்கக் குனிந்தேன்.

" அந்தக் கண்ணாடி பிரயோசனம் இல்லை" என்று கூறி அவள் பார்க்கவிடாமல் தடுத்தாள்.

"என்னிடம் அது ஒன்றுதானே இருக்கிறது?"

"சரியான குருடர் நீங்கள். உங்கள் எதிரே இன்னொரு கண்ணாடி இருக்கிறதே! தெரியவில்லையா?" என்ற அவள் தன் கண்களை விரலால் தொட்டுக் காட்டினாள். "பாருங்கள். இந்தக் கண்ணாடியில் பாருங்கள். உங்கள் முகம் எவ்வளவு அழகாக இருக்கிறது என்பது அப்போதுதான் தெரியும்!"

நான் சிரித்தேன். அவளும் சிரித்தாள்.

அடுத்த கணம் அவளை அப்படியே தூக்கிக்கொண்டு விட்டதை உணர்ந்தேன். "லலிதா! என்னை மணந்து கொள்வாயா!" என்று கேட்டேன்.

அவள் சிரித்தாள். ஆனால் இந்த முறை வேறுவிதமாக இருந்தது. பிறகு கண்களை மூடிக்கொண்டாள். பின் கண்களைத் திறந்து "மீண்டும் ஒருமுறை சொல்லுங்கள்" என்றாள்.

"நீ எனக்கு உரியவளாவாயா?"

அவள் தலையசைத்தாள்.

இவ்வாறு நேரப்போகிறது என்று நான் நினைத்தும் பாராத சமயத்தில் இப்படியெல்லாம் நடந்தது. நண்பர்களுடைய புத்திமதியையும் எச்சரிக்கையையும் நாங்கள் எப்படி மதித்து நடக்கமுடியும்? அவற்றையெல்லாம் காற்றிலே பறக்கவிட்டுக் கல்யாணம் செய்துகொண்டோம். எங்கள் திருமண விழாவைக் கொண்டாட ஒரு விருந்து நடத்தினோம். எங்களுடைய திருமணம் நடைபெறாமல் தடுக்க முயன்ற நண்பர்களனைவரும் விருந்துக்கு வந்தனர். வயிறாரச் சாப்பிட்டுவிட்டு நீண்ட ஆயுளும் நிறைந்த இன்பமும் பெறவேண்டுமென வாழ்த்தினர். ஆயினும் விரைவில் எங்களுடைய மணவாழ்வு முறிந்துவிடும் என்று மறுநாளே அவர்கள் சொல்வதற்குத் தடையாக இது இருக்கவில்லை. அவ்வப்போது எங்கள் வீட்டுக்கு வந்து வயிறு புடைக்க தின்றுவிட்டுப் போகவும் அவர்கள் தவறவில்லை.

நாங்கள் அன்பாகவும் சந்தோஷமாகவும் இருப்பதைக் கண்டு அவர்கள் மனதுக்குள் வருத்தப்பட்டனர் என்பதை எங்களால் காண முடிந்தது. "இன்னும் சேர்ந்திருக்கிருர்களே! அதிசயம்தான்" என்று அவர்கள் மனதில் எண்ணுவார்கள். "உம் எவ்வளவு நாள் நிலைக்கப்போகிறது பார்ப்போம்" என்பார்கள்.

இதெல்லாம் குறித்து நாங்கள் வேடிக்கையை அனுபவிப்பதுபோல் ரசித்தோம். நாங்கள் மிகமிக மகிழ்ச்சியுடன் வாழ்ந்தோம். எப்போதும்போல் எங்களுடைய அன்பு ஆழமானதாக இருந்தது. எங்களுக்குள் சண்டை வராது என்பதல்ல. கணவன் மனைவிக்கிடையே சண்டை வராவிட்டால் அவர்கள் மனிதர்களல்ல என்றுதான் அர்த்தம். எப்போதாவது சண்டை ஏற்படாமல் மணவாழ்வு இருக்கவே முடியாது.

எனக்கும் லலிதாவுக்கும் சண்டை வருவதற்குக் காரணம் எப்போதும் ஒன்ருகவே இருக்கும். வீடு சுத்தமாகவும் ஒழுங்காகவும் இருக்கவேண்டும் என்று அவள் பெரிதும் விரும்புவாள். இந்த இரண்டு விஷயங்களைப் பற்றியும் எனக்கு எதுவுமே தெரியாது. ஒவ்வொரு நாள் மாலையிலும் காரியாலயத்திலிருந்து திரும்பியதும் எனது பூட்சுகளையும். உடைகளையும் இஷ்டப்பட்ட இடத்தில் எறிந்துவிடுவேன். பையிலிருந்து பணத்தையும், பேனுவையும், சாவிக்கொத்தையும் எடுத்து எங்காவது எறிந்துவிடுவேன்.

ஆபீசுக்குப் புறப்பட்டுக் கொண்டிருப்பேன். "பையில் ரயில்வே பாஸ் இருக்கிறதா?" என்று கேட்பாள் லலிதா.

பையைத் துழாவுவேன். அங்கே அது இருக்காது. ஆத்திரத்துடன் வீடு முழுவதும் தேடுவேன்.

லலிதாவுக்குக் கோபம் வந்துவிடும். "குறிப்பாக ஒரு இடத்தில் அதை வைத்தால் என்ன?" என்பாள்.

"நான் வைக்கும் இடத்தில் அது இருந்தால்தானே? நீ தான் எல்லாவற்றையும் கலைத்து விடுகிறாயே!"

"நானா?"

"நீதான். சுத்தம் சுத்தம் என்று பித்துப்பிடித்தலை கிறாயே அதனால்தான் இவ்வளவு கஷ்டமும்." இப்படி நான் சொல்வது நியாயமல்ல என்பது எனக்குத் தெரியும். இருந் தாலும் அப்படிச் சொல்வேன்.

"நான் ஒழுங்காக ஒவ்வொன்றையும் எடுத்து வைப்ப தால்தான் அவை மறுநாள் உங்களுக்குக் கிடைக்கிறது" என்பாள் லலிதா கோபத்துடன்.

"உன்னுடைய ஒழுங்கையும் சுத்தத்தையும் பற்றித் தயவுசெய்து என்னிடம் பேசாதே."

"எனக்கென்ன வந்தது? எப்படியாவது போங்கள். நாளை முதல் உங்கள் பொருள்கள் ஒன்றைக்கூட நான் தொடமாட்டேன். ஆனால் நான் சொன்னதை மட்டும் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். உங்களுடைய சாமான் எதுவும் வேண்டும்போது கிடைக்காது. அப்போது என் னிடம் கத்தக்கூடாது."

"சரி, சரி, பார்ப்போம்"

இப்படி நாங்கள் கோபத்தில் பேசிக்கொண்ட போதி லும் தொடர்ந்து நான் சாமான்களைக் கண்ட இடங்களில் வீசி எறிவேன். லலிதா அவற்றையெடுத்து ஒழுங்காக வைப் பாள். ஏதாவது கிடைக்காவிட்டால் அவளைத்தான் கூப்பிட் டுக் கேட்பேன். "எப்போதுதான் இந்த வழக்கம் உங்களை விட்டுப் போகுமோ?" என்று அவள் முகம் சுளிப்பாள்.

என்னைத் திருத்திக்கொள்வதாக அவளுக்கு வாக்களிப் பேன். ஆயினும் எவ்வளவு முயன்றாலும் அதை என்னால் காப்பாற்ற முடியவில்லை. என்னுடைய சாமான்களை மட்டு மின்றி அவளுடைய பொருட்களையும் கண்ட கண்ட இடத் தில் எறிந்துவிடுவேன். என்னுடைய சீப்பு கிடைக்காத

போது அவளுடையதை எடுத்து உபயோகித்துவிட்டு எங்காவது போட்டுவிடுவேன். அவளுக்கு அது தேவைப்படும் போது தேடுவாள்.

"சியாம்! என்னுடைய சீப்பு எங்கே?" என்று தன் அறையிலிருந்து கத்துவாள். மனச்சாட்சிக்கு சிறிதும் பயப்படாமல் ஒரு பொய்யைச் சொல்லுவேன், "நான் அதைத் தொடக்கூட இல்லையே!" என்று.

ஒரு சமயம் அவள் ஒரு டஜன் சீப்புகளை வாங்கி வந்து என் மேஜைமீது போட்டாள். "இதோ பாருங்கள். இதெல்லாம் உங்களுக்குத்தான். தயவுசெய்து என்னுடைய சீப்பை இனிமேல் எடுக்காதீர்கள்" என்றாள்.

அந்தப் பனிரெண்டு சீப்புகளையும் தொலைத்து விடுவதற்கு பனிரெண்டு நாட்கள்கூட தேவைப்படவில்லை. மீண்டும் பழைய கதைதான்!

எங்களுடைய வீட்டில் ஹார்மோனியம், தபேலா, வயலின் போன்ற பல இசைக்கருவிகள் இருந்தன. ஏனெனில் லலிதா ஒரு பாடகி. நான் விரும்பியபோதெல்லாம் அவற்றை எடுத்து வாசிப்பேன். மீண்டும் அவற்றை உரிய இடத்தில் வைப்பதற்கு மறந்துவிடுவேன். கிராமபோனில் இசைத்தட்டை வைத்துக் கேட்பது எனக்கு மிகவும் பிடிக்கும். விரும்பும்போதெல்லாம் கேட்டுவிட்டு இசைத்தட்டுகளை அப்படியப்படியே போட்டுவிடுவேன். ஊசிகள் தரையெல்லாம் இறைந்து கிடக்கும். நான் உண்மையாக விரும்பியிருந்தால் இந்தத் தவறான பழக்கத்தையெல்லாம் மாற்றிக்கொண்டிருக்கமுடியும். ஆனால் அதனைக் கைவிட நான் தீவிரமாக முயற்சி செய்யவில்லை என்பதையும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஒழுங்கில்லாமல் நடப்பது ஒரு மனிதனுடைய பிறப்புரிமை என்பது என்னுடைய கருத்தாகும். அதிலும் மனைவியைப் படைத்த ஒரு கணவனுடைய விசேஷ உரிமையாகும் அது. சுத்தம், ஒழுங்கு

ஆகிய நல்ல பண்புகளைக் கற்றுக்கொள்ளும் உற்சாகமே எனக்கு ஏற்படவில்லை. சுத்தமும் ஒழுங்கும் இல்லாமல் வீடு இருப்பதைப் பார்த்துச் சகித்துக்கொள்ள லலிதாவினால் முடியவில்லை. எனவே எனக்கும் லலிதாவுக்கும் இடையே ஏற்படும் சண்டைகளுக்கு முடிவே இல்லை. ஒவ்வொரு சண்டைக்குப் பிறகும் தற்காலிக சமாதானம் ஏற்படும். ஒருவர்க்கொருவர் மேலும் அதிகமாக அன்பு காட்டுவதன் மூலமும், கனிவாக நடந்துகொள்வதன் மூலமும் இந்த சமாதானத்தை நாங்கள் கொண்டாடுவோம். மறுநாளே மீண்டும் சண்டை வந்துவிடும். சண்டை, சமாதானம், காதல் என்ற இந்த சக்கரம் சுழன்று கொண்டே இருந்தது.

நாங்கள் மிகவும் சந்தோஷமாக வாழ்க்கை நடத்தினோம் என்பதில் சந்தேகமே கிடையாது. எனவே பாலு என்னை கேலி செய்தபோது இந்த இரண்டு நண்பர்களையும் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் லலிதா எவ்வளவு சிறந்த அழகி என்பதைக் காட்டவேண்டும் ; எங்களுடைய வாழ்க்கை எவ்வளவு இன்பமாக இருக்கிறது என்பதை அவர்கள் உணரும்படி செய்யவேண்டும் என்று விரும்பினேன். ஆனால் பல சந்தேகங்கள் என்னை வாட்டின.

அவள் ஸ்டுடியோவிலிருந்து திரும்பி வராமல் இருந்தால்? அப்படியே வீட்டிலிருந்தாலும் இரண்டு பெருந்தீனிக்காரர்களை நான் அழைத்து வந்திருப்பதை அவள் விரும்பாவிட்டால் ? என்னுடைய நண்பர்களையெல்லாம் இன்முகத்துடன் உபசரித்து அவள் விருந்தளித்திருப்பது உண்மை தான். ஆனால் நாங்கள் தனியாக இருக்கும்போது என்னை ஏசுவாள். "நண்பர்களை அழைத்து வருவதை நான் வேண்டாமென்று சொல்லவில்லை. முன்னறிவிப்பு இல்லாமல் வரக்கூடாது. திடீரென்று யாரையாவது அழைத்துக் கொண்டு வந்து நிற்கிறீர்கள். என் பாடு திண்டாட்டமாகி விடுகிறது" என்பாள்.

எனவே எனக்கு உள்ளூரப் பயம். ஆயினும் அதைக் காட்டிக் கொள்ளவில்லை. டிக்கட் கொடுக்குமிடத்துக்கு ஓடினேன். மூன்று டிக்கட்டுகளை வாங்கினேன். அடுத்த ரயிலில் வீடுநோக்கிச் சென்றோம்.

வீட்டிலே ஒரு அதிசயம் காத்திருந்தது. கதவு பூட்டப் பட்டிருந்தது.

"இதுவும் நம்முடைய துரதிர்ஷ்டம்தான். மகாராணி வீட்டில் இல்லை போலிருக்கிறது, உன் மனைவியைப் பார்க்க வேண்டுமென்று நிரம்ப ஆவலாக இருந்தோம்" என்றான் ராஜா.

"நீ போவதற்குள்ளாவது லலிதா ஸ்டுடியோவிலிருந்து திரும்பிவர அதிர்ஷ்ட தேவதை அருள்பாலிக்கிறாளா என்று பார்ப்போம். அப்படி அவள் வராவிட்டாலும் நீங்கள் அவளுடைய போட்டோக்களைப் பார்க்கலாம்" என்று நண்பர்களுக்கு ஆறுதல் கூறிவிட்டு சாவிக்காக சட்டைப் பையை துழாவினேன். அதை எங்காவது தொலைத்திருந்தால் எவ்வளவு அவமானம்! அந்த ஒரு கணத்தில் என்னுடைய ஒழுங்கின்மைக்காக என்னை நானே சபித்துக்கொண்டு இனிமேல் எல்லாவற்றையும் ஒழுங்காக வைத்துக்கொள்ள வேண்டும் என்று சபதமும் செய்தேன்.

நல்ல வேளை. சாவி கிடைத்துவிட்டது. பல தடவை தேடிப்பார்த்து அது அங்கே இல்லை என்று நான் முடிவு செய்துவிட்ட பையிலிருந்தே அது கிடைத்ததுதான் வேடிக்கை. இதுபோல் என்னுடைய பொருள்கள் அதிசயமாகக் கிடைப்பது வழக்கம்.

பூட்டைத் திறந்து கதவைத் தள்ளினேன். "வாருங்கள் நண்பர்களே" என்று உற்சாகமாக அழைத்தேன்.

உள்ளே காலடி வைத்த அவர்கள் அப்படியே பிரமித்துப்போய் நின்றார்கள். "எவ்வளவு அழகான வீடு!" என்

ருன் பாலு. "எவ்வளவு சுத்தமாக இருக்கிறது?" என்ருன் ராஜா. நான்கூட ஆச்சரியப்பட்டுத்தான் போனேன். அறை நிலைக்கண்ணுடியைப் போல் துல்லியமாக இருந்தது. சோபா நாற்காலிகளுக்கெல்லாம் புது உறை போடப்பட்டிருந்தது. பூத்தொட்டியில் புதுமலர்கள் காணப்பட்டன. மூலையில் இருந்த சிறு மேஜையில் பத்திரிகைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. என் மேஜைமீது சலவை செய்த துணி விரிக்கப்பட்டிருந்தது. தரையில் ஒரு தூசி தும்புகூட இல்லை.

"பிரமாதம் பிரமாதம்" என்று நண்பர்கள் பாராட்டினர். சுவற்றில் மாட்டியிருந்த லலிதாவின் படத்தைக் காட்டி விட்டு, அவளுடைய போட்டோக்கள் அடங்கிய பெரிய ஆல்பம் ஒன்றையும் பார்க்கக் கொடுத்தேன். அப்போது லலிதா இல்லாதது எனக்கு சந்தோஷமாகத்தான் இருந்தது. முன்னறிவிப்பின்றி இரண்டு பேரை அழைத்து வந்ததற்காக அவள் கோபித்துக் கொள்வதிலிருந்து தப்பி விட்டேன் என்று எண்ணினேன். ஆயினும் என்னுல் கவலைப் படாமலும் இருக்க முடியவில்லை. லலிதா வீட்டில் இல்லாவிட்டால் இவர்களுக்கு எதைத் தின்னக் கொடுப்பது? ஓட்டலுக்குப் போவதானுல் அரை மைல் போக வேண்டும். எனக்கு சமைக்கத் தெரியாது. எப்போதாவது நான் தேநீர் தயாரித்தால் அது கழிவு நீரைப் போல் இருக்கும். நிலைமையைச் எப்படி சமாளிப்பது?...திடீரென்று ஒரு யோசனை பளிச்சிட்டது.

சமையலறைக்கு ஓடினேன். அலமாரியைத் திறந்து பார்த்ததும் களிப்பினுல் துள்ளிக் குதித்தேன். நிலத்தைக் கண்டதும் கொலம்பஸ் அடைந்த மகிழ்ச்சியை அப்போது நானடைந்த மகிழ்ச்சியுடன் ஒப்பிட்டால் ஒன்றுமே இராது. புதிதாகச் செய்த இனிப்புப் பலகாரங்களும், பட்சணங்களும் அதில் இருந்தன.

தட்டுகளை மேஜையில் பரப்பிப் பலகாரங்களை எடுத்து வைத்தேன். பிறகு வெளியே சென்று சாப்பிட வருமாறு நண்பர்களை அழைத்தேன்.

அவர்கள் இருவரும் மேஜையிலிருந்த எல்லாவற்றையும் தின்று தீர்த்து விட்டார்கள். லலிதாவையும் என்னுடைய சந்தோஷம் நிறைந்த வாழ்க்கையையும் ஓயாமல் அவர்கள் பாராட்டியதைக் கண்டு பூரித்துப் போனேன்.

உணவை முடித்துக் கொண்டு முன் அறைக்கு வந்தோம். சிகரட்டைப் புகைத்து அதன் சாம்பலையும் துண்டுகளையும் தரையில் கண்ட இடங்களில் எறிந்தோம். அவர்களிடம் வெற்றிலைப் பெட்டியை எடுத்து நீட்டினேன். அவர்கள் தாம்பூலம் தரித்துக் கொண்டு வெற்றிலைக் காம்புகளை தாறு மாருகப் போட்டார்கள். நண்பர்கள் என்னையும் என் மனைவியையும் புகழ்ந்தார்கள். அதில் மனம் மகிழ்ந்து போய் மற்ற எல்லாவற்றையும் மறந்து விட்டேன்.

"குவாலியரில் நாம் மூவரும் சேர்ந்திருக்கும் போது எப்போதும் பாடிக் கொண்டிருப்போம் அல்லவா ? உனக்கு நினைவில்லையா ராஜா !" என்ருன் பாலு. "ஏதாவது பாடு கேட்போம்" என்ருன்.

ராஜாவைப் பாடும்படி தாஜா செய்யவோ வற்புறுத்தவோ வேண்டியதில்லை. தொண்டையைச் சரி செய்து கொண்டு "பக்க வாத்தியத்துக்கு ஏதாவது இசைக் கருவி இருக்கிறதா ?" என்று கேட்டான்.

"என்னுடைய மனைவி புகழ் பெற்ற பாடகி என்பதை மறந்து விடாதே. உனக்கு எவ்வளவு வாத்தியங்கள் வேண்டும் ?" என்று கேட்டு விட்டு லலிதாவின் அறைக்குச் சென்று ஹார்மோனியம், தபேலா, வயலின் ஆகியவைகளுடன் திரும்பினேன்.

பாலு ஹார்மோனியத்தைத் தன்னருகே இழுத்துக் கொண்டான். நான் வயலின் வாசித்தேன். ராஜா தபேலா அடித்துக் கொண்டே பாடினான்.

பாட்டுக் கச்சேரி எவ்வளவு நேரம் நடந்தது என்பது யாருக்கும் தெரியாது.

திடீரென்று பாலு தன் கைக் கெடியாரத்தைப் பார்த்து விட்டு "இரவு ரயிலைப் பிடிக்க வேண்டுமென்பதை மறந்து விட்டாயா ராஜா?" என்று கத்தினான்.

"அட கடவுளே! நேரம் போனதே தெரிய வில்லையே!" என்று வியந்தான் ராஜா.

இருவரும் எழுந்து என்னிடம் விடை பெற்றுக் கொண்டார்கள். "உன்னுடைய மனைவியைப் பார்க்க முடியாமல் போனது துரதிர்ஷ்டம்தான். எங்களுடைய மனமார்ந்த வாழ்த்துக்களை அவளுக்குத் தெரிவி. உங்கள் வீட்டுக்கு வந்ததிலே நாங்கள் பெரும் மகிழ்ச்சி யடைந்தோம் என்று சொல். உண்மையைச் சொல்வதானால் உன்னைப் பற்றி விசித்திரமான பல செய்திகளைக் கேள்விப் பட்டோம். ஆனால் நீயோ அருமையான வீட்டில் வசிக்கிறாய். உங்கள் வாழ்க்கை இன்ப மயமாக இருக்கிறது. நீயும் உன் மனைவியும் குவாலியருக்கு ஒரு முறை வர வேண்டும். கட்டாயம் வா. லலிதாவை அழைத்து வர மறந்து விடாதே" என்றார்கள்,

அவர்களை வழியனுப்பி விட்டு சோபாவில் அமர்ந்து ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தேன்...

நண்பர்களுடன் இருந்த போது எங்கோ ஒரு மூலையில் முடங்கிக் கிடந்த நினைவு இப்போது நீர்க்குமிழி போல் மேலே வந்தது. அலமாரியில் இவ்வளவு பலகாரங்கள் எப்படி வந்தன? இந்தக் கேள்விக்குத் திருப்திகரமான விடை கிடைக்கவில்லை. இது பற்றி மண்டையை உடைத்துக் கொள்வதில் பயனில்லை என்ற முடிவுக்கு வந்தேன்.

எதையாவது எடுத்துப் படிக்கலாம் என்று மேஜையருகே சென்றேன். அதன் மேல் ஒரு கவர் இருந்தது. என் விலாசம் எழுதப்பட்டிருந்தது. அது லலிதாவின் கையெழுத்துத் தான். கவரைப் பிரித்து உள்ளேயிருந்த கடிதத்தைப் படித்தேன்.

"சியாம்! இன்று ஸ்டுடியோவுக்குப் போக வேண்டியிருக்கும் என்று நான் எதிர்பார்க்க வில்லை. அதனால் தான் உங்களிடம் ஒன்றைப் பற்றிச் சொல்ல வில்லை. ஆனால் என்னை அழைத்துப் போவதற்கு ஸ்டுடியோவிலிருந்து கார் வந்து விட்டது. எனவே நான் போகத் தான் வேண்டும். தாங்கள் ஆபீசிலிருந்து திரும்பி வரும் போது நான் ஒரு வேளை வீட்டில் இருக்க மாட்டேன் என்பதால் தான் இதை எழுதுகிறேன். எனக்கு முன்பாக தாங்கள் வீட்டுக்கு வந்தால் தயவு செய்து இதில் கூறியுள்ளபடி செய்யுங்கள். நிறையப் பலகாரங்களைச் செய்து அலமாரியில் வைத்திருக்கிறேன். உங்களுக்கு வேண்டியதை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் தயவு செய்து சாப்பிடும் மேஜையை உபயோகிக்க வேண்டாம். அதற்கு புது துணி போட்டிருக்கிறேன். அதை அழுக்காக்கி விடாதீர்கள். தட்டுக்களை இங்கு மங்குமாகப் போட்டு விடாதீர்கள்.

முன் அறையிலுள்ள எதையும் இடம் மாற்றிப் போட்டுக் குலைத்து விடாதீர்கள். அதை சுத்தமாகவும் ஒழுங்காகவும் வைத்திருங்கள். எல்லாவற்றையும் ஒழுங்கு படுத்தி வைத்திருக்கிறேன். அதைக் குலைக்கும் படியாக எதையும் செய்யாதீர்கள்.

என்னுடைய புதிய படத்தின் டைரக்டரையும் அவருடைய மனைவியையும் தேநீர் விருந்துக்கு அழைத்திருக்கிறேன். ஸ்டுடியோவில் எவ்வளவு வேலை இருந்தாலும் உரிய நேரத்தில் வீட்டுக்கு வந்து விடுகிறேன். மணிக் கணக்காகப் பலகாரங்களைத் தயார் செய்திருக்கிறேன். புதிய

தட்டுகளையும் இதர சாமான்களையும் எடுத்து வைத்திருக்கி றேன். அதை உபயோகித்து விடாதீர்கள். விருந்தினர்கள் வரும் போது வீடு கண்ணுடியைப் போல் அப்பழுக்கற்று இருக்க வேண்டும் மறந்து விடாதீர்கள்...

என்றுமுங்கள்
**லலிதா.**

நெற்றியிலடித்துக் கொண்ட நான் மின்னலால் தாக் குண்டவனைப் போல் இடிந்து போய் நின்றேன்.

மர்மமாக இருந்தது இப்போது எனக்கு விளங்கி விட் டது. எனவே என்னுடைய வியப்பு மறைந்து விட்டது. ஆனல் அத்துடன் நான் செய்து வைத்திருக்கும் குளறுபடி யின் பயங்கரமும் புலப்படத் தொடங்கியது. என் நண்பர் களைத் திருப்திப் படுத்தி அவர்களிடம் வண்டி வண்டியாக பாராட்டுகளை வாங்கிச் சுமந்து கொண்டு விட்டேன். ஆனல் அதற்கு நான் கொடுத்த விலை ?

லலிதா திரும்பி வந்ததும் என்னுடைய செயலுக்காக என்னை விளக்குமாற்றால் அடித்தாலும் அவளை நான் குறை கூற முடியாது. பலகாரங்கள் எல்லாம் காலி. மேஜை யெங்கும் அழுக்கடைந்த தட்டுகள் இறைந்து கிடந் தன. முன் அறையை மூன்றும் வகுப்பு ரயில்வே பிரயாணி கள் தங்கும் அறையாக மாற்றி இருந்தோம். வீடு கண்ணு டியைப் போல் அப்பழுக்கின்றி இருக்க வேண்டுமென்று லலிதா கூறியிருக்கிருள் ! கடவுளே ! நான் என்ன செய்து விட்டேன் ? பிரமித்துப் போய் அப்படியே நின்று விட்டேன்.

சில நிமிடங்களுக்குப் பிறகு ஒழுங்கை நிலை நாட்ட ஏதாவது செய்தாக வேண்டும் என்ற உணர்வு வந்தது.

சமையலறைக்கு சென்று துடைப்பத்தை எடுத்து வந் தேன். வாத்தியங்களை அவைகளுக்குரிய இடங்களில் வைத்து விட்டுத் தரையைப் பெருக்கத் தொடங்கினேன்.

மணி அடிப்பது கேட்டது.

பயத்தினால் என் உடல் நடுங்கியது. லலிதாவினுடைய விருந்தினர்கள் வந்து விட்டார்களா என்ன ?

நல்ல வேளை ! கதவருகே லலிதா தான் காணப் பட்டாள்.

என் கையில் பிடித்திருந்த துடைப்பத்தைப் பார்த்து விட்டு "என்ன இது?" என்றாள்.

என்னால் ஒரு வார்த்தை கூடப்பேச முடியவில்லை.

"என்ன இது?" என்று லலிதா மீண்டும் கேட்டாள் குழப்பமடைந்தவளாக. "துடைப்பத்தை வைத்துக் கொண்டு என்ன செய்கிறீர்கள்."

"பின்னால் சொல்கிறேன். முதலில் ஒரு விஷயத்தை நீ சொல். உன்னுடைய விருந்தாளிகள் வருவதற்கு எவ்வளவு நேரமாகும்?"

"ஒரு வாரம்" என்றாள் அவள்.

"ஒரு வாரமா?" என்காதுகளையே என்னால் நம்பமுடியவில்லை. "ஆனால் கடிதம் எழுதிவைத்து விட்டுப் போய் இருந்தாயே!"

"ஆமாம் இன்றுமாலை வருவதாக இருந்தார்கள். ஸ்டுடியோவுக்கு அவர்களிடமிருந்து போன் செய்தி வந்தது. அவசரமாக டில்லிக்குப் போக வேண்டி இருக்கிறதாம். அடுத்த சனிக்கிழமை தான் வருவார்கள்."

என் மனதிலிருந்து பெரும்பாரம் அகன்றது. சற்று நேரத்துக்குமுன் பயத்தினால் நான் பேச்சற்றுப் போனேன். இப்போது அளவுகடந்த மகிழ்ச்சியினால் பேசும் சக்தியையே இழந்து விட்டேன்.

"எதற்காக என்னை இப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்?" என்று லலிதா கேட்டாள்.

நான் பேசாமல் இருந்தேன்.

"பலகாரம் எல்லாம் வீணாகப்போகிறதே என்றுதான் கவலைப்படுகிறேன். அவற்றைத் தயார் செய்யப் பலமணி நேரம் ஆயிற்று."

திடீரென்று எனக்குப் பேசமுடிந்தது. "வீணாகவில்லை. அவை கடவுளுடைய வரப்பிரசாதம் போல் சமயத்துக்கு உதவின" என்றேன்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

எனக்கு சிரிப்பு பீரிட்டுக் கொண்டுவந்தது.

"இதற்கு என்ன அர்த்தம்? வாய்விட்டு ஏன் சொல்லக் கூடாது?" என்று அவள் களிப்புடன் கேட்டபோதிலும் முகத்தில் புன்னகை மலர்ந்திருந்தது. துடைப்பத்தை வீசி எறிந்துவிட்டு அவளை தூக்கிக்கொண்டு கூத்தாடினேன்.

அவளுடைய முகத்தில் நிலவிய குழம்பிய பாவம் அவளை மேலும் அழகாகத் தோற்றமளிக்கச் செய்தது.

அவளை அப்படியே சாப்பிடும் அறைக்குத் தூக்கிக் கொண்டு போனேன். "அதோபார்" என்று மேஜையைச் சுட்டிக் காட்டினேன்.

அவள் தன் நெற்றியில் அடித்துக்கொண்டாள். "சியாம்! நீங்கள் சுத்த மோசம்" என்றாள். இவ்வளவு தான் அவள் சொன்னது. ஒரு கணம் பேசாமல் இருந்தாள். "கடிதம் எழுதி வைத்திருந்துமா இப்படிச் செய்தீர்கள்? என்ன தான் செய்தீர்கள்? நண்பர்கள் யாரையாவது அழைத்து வந்தீர்களா?"

"ஆமாம். குவாலியர் மகாராஜாவை."

"என்ன?" என்றாள் அவள் பாதி குழப்பத்துடனும் பாதி அவநம்பிக்கையுடனும்.

நான் அவளை அணைத்துக்கொண்டு மீண்டும் சிரிக்கத் தொடங்கினேன்.

— (0) —

# MANITHA DEIVANGAL

## TRANSLATED VERSION OF

# WHERE ANGELS SELL EGGS

By. N. S. PHADKE

ஒரு மொழியில் வெளியாகிய சிறுகதைகள், புதினங்கள் முதலியன மற்றும் பல்வேறு மொழிகளில் வெளிவருவது இன்றைய உலகின் இன்றியமையாத தேவையாக உள்ளது. நாடு, மொழி, இனம் முதலிய எல்லைகளைக் கடந்து அறிவு, கற்பனை, பண்பாடு முதலியன உலக முழுவதும் பரவும் சிறப்பை இன்று கண்கூடாகக் காண்கிறோம். உலக மக்களனைவரும் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு உலக ஒருமைப்பாட்டுக்கு வழிகோலுவதற்கு இது பெரிதும் பயன்படும். அந்த வகையில் பாட்கே என்ற சிறந்த மராத்தி நாட்டு எழுத்தாளர் எழுதிய ஆங்கிலச் சிறுகதைகளில் சில, இந்நூலில் இடம் பெற்றுத் தமிழகத்தில் உலவ வந்துள்ளன. பிறநாட்டுச் சிறுகதை வளத்தை அறிய விரும்புவோர்க்கு இந்நூல் பயன்படுவதுடன் எல்லோர்க்கும் சுவையூட்டும் என்பதில் ஐயமில்லை.